# யார் அந்த மாலதி



பாரதி கலைக்கழக வெளியீடு

கலைமாமணி
ஐயாறப்பன்

# யார் அந்த மாலதி

முதலிய

# கதைப் பாடல்கள்

கவிமாமணி ஐயாறப்பன்

பூர்ணிமா பதிப்பகம்
சைதை, சென்னை - 15.
டிசம்பர் 1987.

முதற் பதிப்பு : டிசம்பர் 1987.


## காணிக்கை

இந்த நூலைத் தமிழ் அன்னைக்கும் தமிழ்ச் சான்றோர்களுக்கும் காணிக்கை ஆக்குகிறேன்.

கவிமாமணி ஐயாறப்பன்
ஆசிரியர் மற்றும் பூர்ணிமா பதிப்பக உரிமையாளர்.

விலை : ரூபாய் பத்து மட்டும்

இந்த நூல் கிடைக்குமிடங்கள் :

1. அமுத நிலையம்,
புத்தக விற்பனையாளர்கள்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.

2. பூர்ணிமா பதிப்பகம்,
50, மருதித் தெரு, சைதை, சென்னை-15.

வெளியிட்டு மகிழ்பவர் :
சைதை பாரதி கலைக் கழகம், சென்னை-15.

அச்சிட்டோர் :
ஸ்ரீ பண்டாரி அச்சகம், சென்னை - 108

## நுழை வாயில்

# கவிஞரின் முகவுரை

சிறுகதை இலக்கியம் ஒரு பாற்கடல் என்பதை கதைகள் எழுத ஆரம்பிக்கும் போது நான் உணரவில்லை. எழுதியதைத் திரும்பப் படித்து எனக்குள் சுவைத்துக் கொள்வேன். கவியரங்கங்களில் கவிதையாக ஏழுதப்பட்டவை இங்கு நான் அறிமுகப்படுத்தும் ஏழு கதைகள். நான் எழுந்து வாசிக்கும் போது கவிஞர்களும் மற்ற ரசிகர்களும் மகிழ்ச்சியால் ஆரவாரிப்பார்கள். மறுபடி சில வரிகளைப் படிக்கக் கேட்பார்கள். அப்போதெல்லாம் உண்மையில் மெய் சிலிர்த்துப் போவேன். 'ஐயாறப்பா நீ கவிஞனடா' என்று எனக்குள் நானே சபாஷ் போட்டுக் கொள்வேன். என்னை வளர்த்தது ஸீசதாப்பேட்டை பாரதி கலைக் கழகம். என் கவிதைகளை வளர்த்தவர்கள் அதன் கவிப் பெரு மக்கள். கம்பனுக்கு ஒரு சடையனைப் போல எனக்குச் 'சொல்லின் செல்வர்' சுராஜ்.

கவிதைக் கதைகளைத் தொகுத்து நூல் வடிவில் கொண்டுவர வேண்டுமென்ற நெடுநாள் அவா இப்போதுதான் நிறைவேறியது. இந்தக் கதைப் பாடல்களை ரஸித்தும் செப்பனிட்டுக் கொடுத்த கவிமாமணி நா. சீ வரதராஜன் அவர்களுக்கும் சொல்லின் செல்வர் திரு. சுராஜ் அவர்களுக்கும் நான் என்றும் கடமைப் பட்டவன்.

இதற்கு முன்னுரை வழங்கி என்னைப் பாராட்டிய வர்களுக்கு மட்டுமல்லாமல், இதை நூல் வடிவில் தயாரிக்க எனக்கு உதவியாயிருந்த என் குடும்பத் தாருக்கும் அச்சகத்தாருக்கும் நன்றி உடையவனா வேன்.

இவைபோல பல கதைகளை நான் எழுதியிருப் பினும் முதல் முதலாக ஏழே கதைகளை இப்போது வெளியிடுகிறேன். வாசகர்களின் நல் ஆதரவு கிடைக்குமானால் மற்ற கதைப் பாடல்களையும் விரைவில் வெளியிடுவேன். பராசக்தி அருளட்டும்.

ஒவ்வொரு கதைக்கும் ஒரு முன் குறிப்பு எழுதி யிருக்கிறேன். சிறுகதை இலக்கியம் ஒரு திருப்பாற் கடலே. அதிலும் கதைப்பாடல்கள் அதன் அமிர்தம். யாவரும் இந்த அமிர்தத்தை உண்டு தேவர் உலகில் சஞ்சரிப்போம்.

வானவெளியில் நீந்துங்கள், வாசகர்களே. உங்களுக்கு வேண்டிய சிறகுகள் தோன்றிவிட்டன.

7—11—87 ஐயாறப்பன்.

தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செயலர்

## டாக்டர் ஔவை நடராஜன் அவர்கள்

**தலைமைச் செயலகம், சென்னை-600 005.**

உவந்தளித்த

# முன்னுரை

கவிமாமணி ஐயாறப்பன் அவர்கள் எழுதிய கதைப்பாடல் தொகுதியைக்கண்டு மகிழ்ந்தேன். அலை அலையாகச் சொல் வரிசையும் குலைகுலையாகக் கருத்துத் துணுக்குகளும் மிதந்து வரும் ஆற்றுப் புனலாக இந்த நூல் திகழ்கிறது. இன்றைய உலகம் சிறுகதையுலகம் என்று சொன்னால் முழுவதும் பொருந்தும். உரைநடையாகத் துள்ளி ஓடும் கதையைக் கண்ணாடித் தொட்டிக்குள் கட்டிக்காக்கின்ற கலைவடிவமாகக் கவிதையை ஐயாறப்பன் மாற்றியிருக்கின்றார்கள். பளிங்கைக் கரைத்துபோல் ததும்பும் ஆசிரியரின் உள்ள விளிம்பின் ஒரு பகுதியைப் பார்ப்பதற்கு 'மல்லிகை' ஒரு சான்றாகும். 'அளந்து பார்த்தால் சாண் அளவில்லை, அத்தனை சிறு கைகள், குழந்தை மல்லிகை அளக்கின்றாள்— தன் குட்டி முழத்தாலே'. குழந்தை மல்லிகை என்று வரைந்த மல்லிகையின் வடிவம் நம் மனத்தில் நிற்கிறது. பொருளாதாரப் புகைச்சலில் கிடந்து புலம்புகிற கவிஞருக்கு மல்லிகை மனத்தில் மட்டுந்தான் மணக்கிறது. ஏங்கும் கவிஞரின் இதயம் மல்லிகையின் கால்கள் திரும்பவேயில்லை, மாலையும்

வரவில்லை என்று சுணங்குகின்றது. உருக்கத்தை உருக்கி வார்ப்பதுபோல்

'கதவினைத் தட்டும் மெல்லோசை இனி
காதில் விழுந்திடுமா ?
நிதமும் நிதமும் இவ்வொலிக்காக என்
நெஞ்சம் அழுகிறது !

என்ற பாடலோடு முடிகின்றது. இது காகித மல்லிகையல்ல. ஐயாறப்பன் பறித்துக்கொடுக்கும் கவிதை மல்லிகை. இது வாடாது. இதன் வெண்மை என்றும் மங்காது. மாலதியும் மல்லிகையுமாக இந்த நூல் கதைப்பொன் பூசிய கவிதைக் களஞ்சிய மாகத் திகழ்கிறது. எளிமை, இனிமை, பொதுமை என்ற மூன்று நரம்புகள் இணைந்து மீட்டும் பாட்டொளியை பக்கந்தோறும் கேட்கலாம்.

11-12-1987 **டாக்டர் ஒளவை நடராசன்**

# யார் அந்த மாலதி? நூலைப் பற்றி

# சொல்லின் செல்வர் இரா. சுராஜ் அவர்கள்

அருமை நண்பர் கவிமாமணி ஐயாறப்பன் கவிதையை யோகமாகவே கொண்டவர்.

பல கவிதை முயற்சிகளை மேற்கொண்டு வருபவர். ஏழு சிறு கதைகளாக எழுந்த கற்பனைகளை, கவிதைக் கதைகளாகவே வடித்துள்ளார். **'யார் அந்த மாலதி'** காதல் நிறைவேறாமல் உயிர் விட்டுப் பேய் வடிவம் பெற்றுவிட்ட பெண்ணைக் கண் முன் கொண்டு நிறுத்துகிறது. அரசு பணியில் பயணியர் விடுதிகளில் தங்கிப் பழக்கம் உள்ளவர்கள், அத்தகைய விடுதியொன்றைப் படம் பிடிக்கும் கவிஞரின் வரிகளை உண்மையென்று ஒப்புக் கொள்வார்கள்.

**'பைசாச நாடியில்'** பிசாசு ஏதும் கிடையாது, பணம் சேர்க்கும் ஆசைப் பிசாசுதான். நகைச் சுவை இழையோடும் இக்கவிதையின் கரு.

**'பழையனூர் நீலி'** பயங்கரமானதொரு கதை. பெண்ணுக்கு அநீதி இழைப்பவர்களுக்கு படிப்பினை தரும் கதைக் கவிதை.

**'மல்லிகை'** இத்தொகுப்பின் சிறந்த கதைக் கவிதை. மல்லிகை விற்கும் மல்லிச் சிறுமியை படிப்பவர்கள் மறக்க முடியாது. கரு மிக நுண்ணியது. ஆனால் எத்தனை அழகாக மலர்ந்திருக்கிறது இம் மல்லிகைக் கதை.

**'சீதாலட்சுமி'**யில் பாரதியின் பாஞ்சாலியைப் புதிய கோணத்தில் காண்கிறோம். மனித விலங்குகளான கண்ணப்பன், ஆறுமுகம் ஆகியோர் பெற்ற தண்டனை சரியானதே அவர்கள் மீது அனுதாபத்துக்கே இடமில்லை.

ஏழு கதைகளையும் கதைகள் என்பதற்காகவல்ல. அவை கவிதைகளாகவும் இருக்கின்றன என்ற காரணத்துக்காக நாம் படிக்க வேண்டும்.

8-12-1987

இரா. சுராஜ்

# பொருளடக்கம்

# பார் அந்த மாலதி?

## பேய்க் கதை வரிசையில்...

### முதலாம் கதை

மோகினிப் பிசாசுகளை நீங்கள் பார்த்ததுண்டா? கேள்வியாவது பட்டதுண்டா? மலைப்புற பங்களாக்களைப் பார்த்ததுண்டா? அவற்றில் ஒரு நாளேனும் தங்கியதுண்டா? ஒரு மண்டை யோடு ஒரு ராத்திரியில் என்ன பாடு படுத்தி விட்டது? அப்பப்பா! அதை நினைத்தால் இன்று கூட...

மேலே படியுங்களேன்...

யார் அந்த மாலதி ?
ஏன் அங்கு வந்தாள் ?
யார் செய்த கொடுமை ?
ஏன் இந்த முடிவு ?

எந்தச் சேதியையும் நான் மறந்து போனாலும்
இதுமட்டும் என் நெஞ்சில் ஏனோ நிலைக்கிறது !
எந்த நிகழ்ச்சியையும் நான் மறக்க முயன்றாலும்
எதற்காக இதுமட்டும் என் நெஞ்சை அலைக்கிறது ?

யார் அந்த மாலதி ? ஏன் அங்கு வந்தாள் ?
யார் செய்த கொடுமை ? ஏன் இந்த முடிவு ?
ஊர் விட்டு வந்தாள். உறவற்றுப் போனாள்
ஊர் வெறுத் தொருநாள் உருமாறிப் போனாள்

இதுவெல்லாம் கதையென்றே
என் மனம் மறுத்தாலும்

இன்னும் அதை நினைத்தாலும்
என் முன்னே நிற்கிறது.

பதைபதைக்க வெண்மண்டை
பக்கத்தில் சிரிக்கிறது

பல் வரிசை விளக் கொளியில்
பட்டுத் தெறிக்கிறது.

யார் அந்த மாலதி ? ஏன் அங்கு வந்தாள்
யார் செய்த கொடுமை. ஏன் இந்த முடிவு ?

o o o

அலுவல் காரணமாய் அவ்வூர்க்கு நான்
சென்றேன்.
ஆயும் பணி முடிக்க அங்கேயே தங்கி
விட்டேன்.
சில நாட்கள் என் நிலைமை இப்படித்தான்
ஆகிவிடும்.
தென்னாட்டில் ஓரூரில் தங்கி விட்டேன்
அன்றொருநாள்.
ஊருக்கு வெளிப்புறத்தே உயர்ந்த மலைச்
சாரலிலே

ஒதியங்காட்டருகே
சிறியதொரு மாளிகையில்
யாருக்கும் பொதுவாகச்
சிறுதொகையில் வாடகைக்கு
இராத்தங்கப் பொதுப் பணியார்
ஏற்பாடு செய்திருந்தார்.

சில்லென்று மலைக் கணவாய்த்
தென்றல் தவழ்ந்து வரச்
சிற்பம் போல் ஆங்காங்கு
தேக்குமரம் நின்றிருக்க
வில்லைப் போல் செவ்வானம்
மேலே படர்ந்திருக்க
மெல்ல உணவருந்தி
வீதிவழி நான் நடந்தேன்.

நடந்தே மலைச்சாரல்
விடுதிக்கு நான் சென்றால்
நல்ல மலைக் காற்றில்
சுகங்கிடைக்கும் அல்லாமல்
தொடர்ந்து வருகின்ற நண்பருடன்
பேசிடலாம்
தொல்லைக் களைப் பெல்லாம்
சற்றே மறந்திடலாம்.

பொதுப் பணியார் மாளிகையில்
ஓர் அறையில் நான் இருந்தேன்
உடன்வந்த நண்பரெல்லாம்
ஊர் திரும்பிப் போய்விட்டார்.
மிதமான விளக்கொளிகள்
ஆங்காங்கே சில உண்டு
மினுக்காம் பூச்சிகளும்
மேலுக்கு வெளிச்சமிடும்.

ஏவலாள் படுக்கை எலாம்
தட்டிவிட்டுச் சீராக்கி
ஏதோ திரைப் படமாம்
சொல்லிவிட்டுப் போய்விட்டான்
காவலாள் வெளிப்புறத்துக்
கதவை அடைத்துவிட்டுக்
கட்டிடத்தின் ஒருபுறத்தில்
கால்நீட்டச் சென்றுவிட்டான்.

o o o

படுக்கைக்குப் பக்கத்துச்
சாளரத்தைத் திறந்துவிட்டுப்
பக்கத்து மேசை எதிர்
விளக்கேற்றி உட்கார்ந்தேன்
எடுத்துவந்த கட்டுகளை
ஒவ்வொன்றாய் எடுத்தடுக்கி
என் பணியை யான் தொடர்ந்தேன்
இரவுக்குள் முடித்திடவே.

தற்செயலாய் வெளிச்சத்தில்
சன்னல் கதவருகில்
தவம் கிடக்கும் புத்தகத்தைக்
கண்பார்க்க அதை எடுத்தேன்.
இச்சிறு நூல் யாரோ
இதற்குமுன்னே வந்தவர்கள்
இங்கே வைத்திருப்பார் என்றெண்ணி
அதைப் பிரித்தேன்.

'பேய்கள் நடமாடும் சாவடிகள்'
புத்தகப் பேர் !
மிகப் பழைய நூல் என்று
மேலட்டை காட்டியது.
ஆய்வுப் பணி அனைத்தும்
அப்படியே வைத்துவிட்டு
அரைக்கணமே புத்தகத்தில்
பார்வை செலுத்தலுற்றேன்.

எடுத்த புத்தகத்தில்
காந்தம் இருந்ததுவோ ?
எழுத்துத் திறம் அவ்வாறு
என்னெஞ்சை இழுத்ததுவோ ?
தொடுத்த மந்திரம் போல்
வைத்த கண்ணும் வாங்காமல்
தூக்கமென்ப தறியாமல்
தொடர்ந்ததிலே முனைப்புற்றேன்.

வெளிப்புறத்தில் எட்டத்தில்
விச்சுளியின் நீட்டோசை.
வெள்ளி நிலா காய்கிறது
வெளவால் பறக்கிறது.
நெளிந்து வரும் மலைக்காற்றில்
நெடுமரத்தின் மூச்சொலிகள்
நெடுந்தொலைவில் ஓர் ஆந்தை
எட்டுமுறை அலறிற்று.

எங்கிருந்தோ திரைப்படத்தின்
மெல்லிசையும் கேட்கிறது.
என்றன் அறைக்குள்ளே
என் இதயம் ஒலிக்கிறது.
இங்கிந்த வேளையிலே
நான் தனித்துச் சிந்தனையில்
ஏகாந்தமாகி
எனைமறந்து படிக்கின்றேன்.

o o o

'பட்டால்' வன்றேதோ
சன்னல் மேல் அடிபட்டுப்
படுக்கைக்குப் பக்கத்தில்
கதவோரம் விழுகிறது.
நட்ட நடுநிசியில்
திடுக்கிட்டு நான் எழுந்து
நடுவிளக்குப் பொத்தானைத்
தட்டியங்கு பார்க்கின்றேன்.

மொட்டைத் தலையோடு
வெள்ளை வெளேர் என்ற நிறம்
முழி இல்லா மண்டை ஒன்று
முறைத் தென்னைப் பார்க்கிறது.
பட்டப் பகல்போல
மேசை விளக் கெரிகிறது.
பார்க்கப் பயங்கரமாய்
மண்டை ஓடு சிரிக்கிறது !

கத்திவிட வாயெடுத்தேன்
கனக்கிறது அடித்தொண்டை.
கால்களெல்லாம் தள்ளாடக்
கைநடுங்கி நிற்கின்றேன்.
தத்திமெள்ள முன்நகர்ந்து
சாத்தியுள்ள கதவுகளின்
தாழ்ப்பாளைத் திறந்துவிட்டேன்
நகர்கிறது வெண்மண்டை !

ஆச்சரியம் ! ஆனாலும்
சத்தியமாய் இது உண்மை !
அப்படியே நகர்ந்து அதுவும்
வெளிப்பக்கம் போகிறது.
பேச்சுக் குரல் வெளியே
பக்கத்தில் கேட்கிறது.
பெரிதாகப் பக்கத்து
அறைவெளிச்சம் தெரிகிறது.

''பார்த்தேளா, பார்த்தேளா,
மாலதியின் தலைமண்டை
பக்கத்து அறை வழியே
பாவம் இது வருகிறது''
கூர்ந்து கவனித்தேன்
கூறியது பெண்குரல்தான்
கூடத்துப் பக்கத்தில்
உரையாடல் கேட்கிறது.

''மாலதியா!, அவள் இறந்து
பதினைந்து வருடங்கள்
மள மளவென் றோடிறறே
மறக்கத்தான் முடிந்திடுமோ ?''
சாலத்தான் காதில்இரு
தெளிவாக விழுகிறது.
சற்றே ஆண் குரலின்
உரையாடல் தனைக்கேட்டேன்

''அம்மா நீ தேற்றிக்கொள்
அழுவதனால் பயன் உண்டோ ?
ஆர்வந்தே உன் விதியை
அழித்துத் திருத்திடுவார்.
அம்மானை அடையத்தான்
தவமிருந்தாய் ஆனாலும்
ஆருக்கும் உதவாமல்
இந்தவிதம் ஆகிவிட்டாய்.''

இந்தக் குரல் கேட்டேன்
கேவி அழுதபடி
எங்கும் எதிரொலிக்கத்
தேம்பல் ஒன்று நான்கேட்டேன்.
முத்திவந்து கதவுகளை
மெல்லத் திறந்து கொண்டு
மோனத்தைக் கிழித்துவந்த
திசைபக்கம் திரும்புகிறேன்.

பக்கத்தில் அறைக்கதவு
பூட்டிக் கிடக்கிறது.
பலகணிகள் எல்லாமே
சாத்திக் கிடக்கிறது.
இக்கணத்தின் முன்னே
கேட்ட குரல் இரண்டும்
எங்கிருந்து கேட்டோம் !
ஈதென்ன விபரீதம் ?

பட்டப் பகல் போலக்
காய்ந்த நிலா மேற்கிருந்து
பழுப்பு நிறங்கலந்து
மங்கித் தெரிகிறது.
எட்டத்தில் ஓதிய மரம்
தலைவிரித்து நிற்கிறது.
இனமறியா நடுக்கத்தில்
என் இதயம் துடிக்கிறது.

மணிபார்த்தேன் இரண்டைந்து
மறுபடியும் உள் நுழைந்தேன்.
வாசலிலே யாரோ
நடக்கின்ற காலோசை !
துணிச்சல் வராமையினால்
புத்தகத்தைச் சன்னலிலே
தூக்கியெறிந்து விட்டுக்
கண்ணயர்ந்தேன் கீழ்ந்தரையில்.

ஏவலாள் வந்தென்னை
எழுப்புகிறான். மணி எட்டு.
லேசான காய்ச்சல்.
இருந்தாலும் புறப்பட்டேன்.
ஆவலாய்ச் சன்னலண்டை
என்பார்வை மேவவிட்டேன்.
அங்கிருந்த புத்தகத்தை
அறைமுழுதும் காணவில்லை !

இதுவெல்லாம் கற்பனை என்று
என் மனம் மறுத்தாலும்
இன்றும் அதை நினைத்தாலும்
என் முன்னே தெரிகிறது.
பதை பதைக்க வெண்மண்டை
பக்கத்தில் சிரிக்கிறது.
பல்வரிசை விளக்கொளியில்
பட்டுத் தெறிக்கிறது.

யார் அந்த மாலதி !
ஏன் அங்கு வந்தாள் ?
யார் செய்த கொடுமை !
ஏன் இந்த முடிவு ?

# பைசாச நாடி

## பேய்க் கதை வரிசையில்...

### இரண்டாம் கதை

இது ஒரு வேடிக்கையான கற்பனை. பொங்கும் சனி மங்கும் சனி என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? இல்லை என்றால் தெரிந்து கொள்ளாதீர்கள்! இந்தக் கதையைப் படிக்காதீர்கள்! சொன்னால் கேட்க மாட்டீர்கள். நான் என்ன செய்வது, நீங்களும் சைத்தானிடம் வகையாக மாட்டிக் கொண்டீர்கள்.

போகட்டும் பைசாச நாடியைப் பார்த்திருக்கிறீர்களா? கவிதையாலேயே உங்களிடம் அது பேசும். அருமையான ஓலைச் சுவடி. தமிழ்த் தாத்தா சாமிநாதஐயரிடம் அது மாட்டிக் கொள்ளவில்லை. என்னிடம் அது எக்கச்சக்கமாய் மாட்டிக் கொண்டது. அதைத்தான் எழுதுகிறேன். தயவு செய்து மேலும் படிக்காதீர்கள்!

கேட்டதெலாம் நமக்கிங்கே
கிடைத்துவிட்டால் பெருமகிழ்ச்சி
வாட்டம் தவிர்த்திங்கே
மண்ணுலகில் வாழ்ந்திடலாம்.

உப்புக்கும் பாடிப்
புளிக்கும் ஒருகவிதை
ஒப்பிப்பேன் என்றவ்வை
உரைத்த மொழி நாமறிவோம்.

கவியரசர் பாரதியார்
ரகசியமாய் ஒரு கடிதம்
புவியரசர் ரெட்டப்பர்
புகழ் முன்னர் சேர்த்ததுவும்

சீட்டுக் கவி என்று
தெரியாமல் நூல் தொகுத்தோர்
பாட்டு வரிசையிலே
பகல் வெளிச்சம் ஆக்கியதும்

எல்லாம் வறுமையினை
எதிரொலிக்கும் சேதியன்றோ?
பொல்லாத காசேநீ
போயொளிந்த தெவ்விதமோ?

காசிருந்தால் இந்தக்
காசினியை யான் வெல்வேன்
தூசாகப் பஞ்சத்தைத்
தூள்தூளாய்ச் செய்திடுவேன்.

பணம் பண்ணும் வித்தையை நான்
பக்குவமாய் அறிந்திட்டால்
கணம் கணமும் நான் வளர்வேன்
கண்ணியவான் ஆகிடுவேன்.

குறுக்கு வழியாலே
        கோடீஸ்வரர் ஆனவரின்
பெருத்த வரலாற்றுப்
        புத்தகந்தான் கிடைக்காதோ ?

வழக்காடும் தொழில் கற்றக்
        காந்திமகான், இருப்பதையும்
முழுக்க முழுக்க இந்த
        நாட்டுக்கே தந்தொழித்தார்.

ராஜாஜி நேருஜி
        ஆதியிலே பணக்காரர்
தேசப் பணிக்கென்றே
        தீர்த்தார்கள் செல்வத்தை

மூதாதை சொத்தெல்லாம்
        முழுக்க பலியாக்கி
நேதாஜி கண்டதென்ன
        நெல்மணிதான் சேர்த்தாரா ?

செல்வத்தைச் சேர்க்கின்ற
        திருப்பணிக்கே ஆளாகி
அல்லும் பகலும் நான்
        அலைந்ததை யாரறிவார் ?

நூல் நிலையம் பலப்பலவும்
        நுழைந்து திரிந்ததிலே
கால்வலிதான் மிச்சம் ஒரு
        காசளக்கும் நூல் இல்லை.

இருந்தாலும் விட்டேனா ?
        நூல்குப்பை என்பார்கள்
திறந்த வெளியரங்கில்
        தெரு வோரக் களஞ்சியத்தில்

பழைய புத்தகங்கள்
வைத்திருந்த பக்கத்தில்
பழிகிடந்த ஒரு கட்டு
பரிவோடு நோக்கியது.

மலிவாக 'நகையோடு
மாணிக்கம்' வந்தாற் போல்
அலைபாயும் என் நெஞ்சில்
ஆறுதலைத் தந்ததிது.

பக்கம் புரட்டுகிறேன்
பைசாச நாடி என்று
சிக்கெனவே என் கண்ணில்
தெரிந்தவுடன் விலைகேட்டேன்.

ஒரு ரூபாய் என்றவுடன்
ஒன்பதாம் முறை பிசுகி
அரை ரூபாய் தந்ததனை
ஆசையுடன் வாங்கிவிட்டேன்.

நாடிகளில் எத்தனையோ
வகையுண்டு. கேட்டுள்ளோம்.
ஏடுகளில் முன்னோர்கள்
எழுதி வைத்த சோதிடங்கள்

பிறந்த முதல் வகைப்படுத்தி
பிசகின்றிக் கூறுபவை.
சிறந்த இலக்கியமாய்த்
தெரிந்தவர்கள் சொல்லுகிறார்.

'சுகர் நாடி', தமிழ்தேடும்
'அகத்தியரின் அருள் நாடி'
'சகதேவர் உரை நாடி'
சப்த ரிஷி பொருள் நாடி

கௌ மார நாடி எனும்
இவை எல்லாம் அருள் நாடும்.
தவமான போக்கினிலே
நின்றவர்க்கே ஆனவையாம்.

பைசாச நாடிக்கோ
பலவகையில் புகழ் உண்டு.
எய்தும் பொருள் ஒன்றே
இலக்கியமாய்க் காட்டுமிது.

தீமை வழியானாலும்
சீக்கிரமே பணம் சேரும்.
ஆமைபோல் ஐம்புலனும்
அடக்குவதைச் சாடுமிது.

அற்பம் எனப் போனாலும்
அடைவதுதான் புகழ் அன்றோ ?
சற்றும் உழைப் பிற்கே
இடமில்லை நம்பிடலாம்.

அருமைப் புத்தகத்தின்
முதற்பக்கச் செய்யுளிது.
பொருள் சேர்க்கும் ஆசையினால்
யான் படித்தேன் சொல்லுகிறேன்.

''நம்பி எனைப் படிக்கும்
நல்லவனே நீகேளாய்
கும்பச் சனி மேட்டிற்
குற்றவன் நான் கூறுகிறேன்.

அன்பாய் அடுத்தசனி
எள்ளுருண்டை தான் படைத்து
ஒன்பதுக்கு முன்பக்கம்
உன்னிப்பாய்ப் படிப்பாயே !

வேதத்தின் வாக்காய்
மேலோரின் பொன் மொழியாய்
ஓதியவா றெள்ளுருண்டை
படைத்துப் படித்திட்டேன்.

'எட்டான பக்கத்தைப்
படித்தவனே எழில் மகனே!
கிட்டாத அதிட்டத்தைக்
கிண்டியிலே நீ காண்பாய்

எட்டுக் குதிரையிலும்
எட்டு முறை சீட்டெடுத்தால்
தட்டாமல் வென்றிடுவாய்
சனிக்கிழமை பூசையிடு,'

ஏட்டில் குறித்தபடி என்னாசை
உந்திவிட
ரேஸ்டிப்சும் பார்க்காமல்
ஏதோதோ சீட்டெடுத்தேன்.

வெள்ளோட்டம் பார்ப்பவரை
வேடிக்கை பார்த்திருந்தேன்.
புள்ளிக் குறிப்பெழுதிப்
பொழுதெல்லாம் கழித்தவர்கள்,

பங்களூர் ரேஸ் பற்றிப்
பல கதைகள் பேசுபவர்,
தங்கையில் தொலைதூரக்
கண்ணாடி கொண்டவர்கள்,

எப்படியும் இந்தமுறை
ஜயித்திடுவோம் என்பார்கள்.
இப்படியாய் இருப்பவர்கள்
என் முன்னே கண்டிருந்தேன்.

ஆச்சரியம் என்ன வென்றால்
அதிருஷ்டம் என்பக்கம்
பூச்சொரியும் கொடி போல
பொங்கித் ததும்பியது.

கால்நடையாய்க் காலையிலே
களம்நோக்கிச் சென்றவன் நான்
கால் லட்சம் பணத்துடனே
காரேறி வீடுவந்தேன்.

பைசாச நாடியிலே
பகர்ந்தபடி சனிக்கிழமை
நெய்யாலே விளக்கேற்றி
நைவேத்யம் படைத்திட்டேன்.

இரண்டாம் செய்யுளிலே
என்நோக்கம் பதிவுறவே
கண்டதொரு பாட்டிங்கே
கவனமுடன் சொல்லுகிறேன்.

'கேளப்பா சீடா நீ
கிண்டியிலே பெற்ற பொருள்
மீளப் பெருக்கிட ஓர்
வழிசொல்வேன் மனம்வைப்பாய்.

பதினெட்டாம் பக்கத்தில்
பகர்ந்தபடி எண்முடிவில்
விதவிதமாய்ப் பதினெட்டுப்
பரிசுச் சீட் டெடுத்திடுக'

நாடியிலே சொன்னபடி
கடைத் தெருவை நான் அடைந்தேன்.
தேடி வந்த சீட்டெல்லாம்
அந்தந்த எண் முடிவே.

மாதம் முடிந்தவுடன்
மறக்காமல் தினசரியில்
ஆதரவாய் எனக்கங்கே
சேதியினைக் கண்ணுற்றேன்.

சோதிடத்தை நம்பியவர்
சோற்றுக் கலைவர் என
ஏதும் அறியாதார்
இயம்பும் ஒரு கூற்றாச்சு.

போதாத காலத்தால்
பொருள் கூடாப் பாரதியார்
சோதிடம் தனையிகழச்
சொல்லிவைத்தார் ஒருபாட்டில்

என்போலே ஒரு நூலை
அவர் கண்டால் இப்படியா
பொன் போன்ற சோதிடத்தைப்
பொய் என்று கூறிடுவார் ?

அதிட்டச் சீட்டெனக்கோ
அத்தனையும் பணமாச்சு.
புதுக்கணக்கை வங்கியிலே
தொடக்கியவன் நின்றேனா ?

பழையபடி சனிக்கிழமை
பைசாப் பூசையிலே
முழுகியவன் நாடியிலே
மூன்றாம் செய்யுள் படித்தேன்.

முப்பத் தெட்டாம் பக்கம்
முற்றிலுமே ஒரு திருப்பம்.
அப்படியே தொழில் துறையில்
பங்குபெற உத்தரவு.

தொழில் பெருகி முதல்பெருகித்
தொட்டதெலாம் பெருகுமெனப்
பழஞ்சுவடிப் பாட்டாலே
பைசாசம் கூறியது.

தேர்ந்தெடுத்த கட்சிக்கு
நிதி உதவச் சொல்லியது.
தேர்தலிலே நான் நின்றேன்
'திடும்' பதவி உயர் வெனக்கு !

சனிக்கிழமை சனிக்கிழமை
தவறாமல் விமரிசையாய்
சலிக்காமல் பூசையினை
நான் நடத்தி வந்திடுவேன்

ஓகோகோ என்று பெரும்
ஓட்டல்களில் முதலீடு
ஆகாயம் எட்டுவதாய்
அழகழகாய் மாளிகைகள்

நாற்பத் தெட்டாம் பக்கம்
நவின்றபடி பாடுகிறேன்
நோற்பவரைக் காக்கின்ற
நூல் ஓதும் பைசாசம்.

'' உள்ள பணத்துக்குக் ''
கணக்கொன்றும் காட்டாதே !
கள்ளப் பணம் என்றால்
கசப்பாக மாறிடுமா ?

உள்ள பணத்துக்குக்
கணக்கெழுதக் கூடாது,
உள்ளபடி மண்டை
உபதேசம் ஏற்பாயே'

கள்ளக் கணக்கெழுதும்
கைத்திறத்தார் என் நண்பர்,
மெள்ள அயல் நாட்டோடு
தொடர்பதிகம் கொண்டுவிட்டேன்.

அற்புதமாய் நோட்டடிப்பேன்.
அதை வங்கி தனில் சேர்ப்பேன்.
சுற்றத்தார் ஒருவருமே
அறியாமல் செய்திடுவேன்.

ஐம்பத் தெட்டாம் பக்கம்
அப்படியே சொன்னபடி
சம்பத் தெல்லாம் தங்கக்
கட்டிகளாய் நான் மாற்றி

பூமிக் கடியில் ஒரு
சுரங்கத்தில் வைத்துவிட்டு
ஊமைச் சேவகனைக்
காவலுக்கும் போட்டுவிட்டேன்.

அடுத்த சனிக்கிழமை
அந்தப் பேய்ச் செய்யுளிலே
கொடுத்த எச்சரிக்கை
குமைந் தழியச் செய்ததுகாண்.

"இன்பக் களிநிலையில்"
இருப்பவனே கேளப்பா.
அன்பான உன்னை நான்
அகன்றுவிட நினைக்கின்றேன்.

அறுபத் தெட்டாம் பக்கம்
அவ்வளவாய்ச் சரியில்லை.
வருவதைநீ இன்று முதல்
அனுபவிப்பாய் வருகின்றேன்".

டெலிபோன் மணி அடிக்கக்
செவிட்டுமை அதை எடுத்தான்
பழிகாரன் ! இத்தனைநாள் !
பேசாதான் பேசுகிறான்.

வாசலிலே 'ஜீப்'பொன்று
பட்டென்று நிற்கிறது.
நேசமுள நண்பருடன்
போலீசார் வருகின்றார்.

மேசையறை தான் இழுத்தேன்
மிகவிரைவாய்த் துப்பாக்கி
வீசி எடுத்தேன் ஊமையனைச்
சுட்டுவிட.

குண்டுகளே இல்லாமல்
சுழல் விசைதான் இயங்கியது.
முண்டாசுப் பழிகாரன்
கடகடெனச் சிரிக்கின்றான்.

போலீசும் என்னருகே
பொசுக் கென்றே வருகிறது.
பொல்லாத நண்பர் எனைக்
கைகுறித்துக் காட்டுகிறார்.

நாலாறு மாதமென
நான் சேர்த்தப் பொன்னெல்லாம்
நான்கே நிமிஷத்தில்
பறிபோச்சே சாத்தானே.

நாடிப் புத்தகத்தைப்
புரட்டுதற்கே எண்ணியவன்
நான் வைத்த இடந்தனிலே
ஆங்கதையும் காணவில்லை.

ஓடிப்போய் ஒளிந்து கொள்ள
அவகாசம் எனக்கில்லை.
உயர்மாடிக் கட்டிடத்தின்
மேலிருந்து குதித்துவிட்டேன்.

கீழே புல்தரையின்
நடுவுள்ள நீர்த்தொட்டி
கீழ்க் காலில் தாக்கியதால்
குருதி பெருகியது.

பாழான போலீசில்
சிக்கியவன் திணறுகிறேன்.
''பைசாசே காப்பாற்று
காத்திடுவாய்'' என்கின்றேன்.

கண்ணை விழிக்கின்றேன்
கண்டதெல்லாம் நெடுங் கனவு !
கற்பனையால் பணம் சேர்க்க
நைப்பாசை விளைவாச்சு.

கண்ணெதிரே கைதூக்கும்
கந்தன் படம் கண்டேன்.
நாமிருக்க பயமில்லை
என்றாசி கூறுகிறான்.

'உழைப்பாலே சேர்க்கின்ற,
பணம் ஒன்றே போது'மென்று
உள்மனத்தால் கூறி அவன்
காலில் விழுகின்றேன்.

நழைக்கின்ற அருட்பார்வை
தளிர் முகத்தில் தெரிகிறது.
சத்தியத்தின் நெறி அதிலே
தனியாட்சி புரிகிறது. □

# பழையனூர் நீலி

## பேய்க் கதை வரிசையில்...

### மூன்றும் கதை

பழையனூர் திருவாலங்காட்டை அடுத்த சிற்றூர். ஆலங்காட்டுக் கூத்தன் எவ்வளவு பெருமை கொண்டவரோ, அவ்வளவு சிறப்புப் பெற்றவள் பழையனூர் நீலி.

வணங்கினரை வாழ வைக்கும் குலதெய்வம் ஆகிய நீலி, பெண் குலத்துக்குக் கேடு நினைக்கும் எவரையும் லேசில் விடமாட்டாள். தன் அன்பு மனைவியைக் கிணற்றில் தள்ளிவிட்டு வேறு ஒருத்தியைக் கபடமாய்த் திருமணம் செய்து கொண்ட அரிய நாதன் என்ன கதிக்கு உள்ளானன் என்பதைப் படம் பிடித்துக் காட்டும் கவிதைப் பாடல் இது.

## 1. ஒற்றையடிப் பாதை

மாலை வெயில் மாறி
மஞ்சள் பளீரிட்டு
வானம் பழுப் பேறவும்
சாலை நெடுந் தொலைவு
சலியாமல் தான் நடந்து
தனிவழி ஒருவன் வந்தான்

ஆலங்காட்டைத் தாண்டி
அடுத்தாற் போல் பழையனூர்
அந்தியும் நெருங்கு முன்னே
காலங் கடத்தாமல்
காட்டுவழி என்பதால்
கடுகியே அவனும் வந்தான்.

ஒற்றை யடிப் பாதை
ஓங்கிய புதர்க்கிடையில்
உய்யென்று வண்டின் சத்தம்
சுற்றுப் புறங் காடு
சூழ்கின்ற இருளோடு
தூரத்தில் கூகை ஓசை

காடை மணிப் புறு
கௌ தாரி எனப்பல
காட்டுப் புள் செய்யும் ஓலம்
தாடை யகன்று விழி
சற்றே பெருத்து அலறி
தனிக்குரல் கொடுக்கும் ஆந்தை

கும்கும் கும் என்றுறுமும்
கோட்டானின் இடியோசை
கோரமிகு நரியின் ஊளை
எங்கெங் கிலும் தொங்கி
இங்கங்குமாய் அசைந்து
இழிதரும் ஆலம் விழுதம்.

பாழான மண்டபம்
பக்கங் கடந்தங்கு
பாறை யிடை மேட்டுவழியில்
தாழ்வாக வந்துள்ள
கொடியொன்று பக்கத்தில்
சலசலென் றாட நின்ருன்.

திடுக்கிட்ட மனிதனே
தேராமல் நிற்கையில்
திரும்பவும் ஓசை கேட்டான்.
படக் கென்ற மார்பினைப்
பற்றிஞன் கையினல்
பார்த்து நிலை குத்தி நின்ருன்.

ஓசைதான் வந்த திசை
உன்னிப்பாய்க் கேட்டாலும்
ஒன்றும் தான் காணுமையால்
மீசையில் கைவைத்து
மேலுக்குத் துணிவுடன்
விரைவாக நடக்கலாஞன்.

அழுகின்ற குரல் ஒன்று
அண்மையில் கேட்டிடவும்
'ஆர் ?' என்றே அதட்டி நின்ருன்
விழுது ஒன்று தொங்கவும்
மேலிருந்து ஒருகுரல்
விசுப்பலில் பதில் சொன்னது.

''என்னைநீர் அறியீரோ ?
யார் என்று கேட்கிறீர்
என்னை விட் டேகலாமோ ?''
முன் அவன் செல்லவும்
முழங்கையைப் பற்றினாள்
முரண்டுகள் செய்யலானாள்,

வழியொன்று மில்லாமல்
வார்த்தைகள் தடுமாற
''வந்திடு'' என்று அவனும் சொல்ல
அழிகின்ற ஆண்மையோடு
அவள் கரம் பற்றினான்
அவனுடன் அவளும் போனாள்.

o o o

## 2. அத்தை மகள் காதல்

சீர் தொண்டை நாட்டினைச்
சேர் பழைய னூரிலே
சிறந் தோங்கும் முந்நூறுபேர்
காராளர் தம்முளே
காதைக்கு நாயகன்
கண்ய மிகும் அரிய நாதன்

காரொத்த கண்ணினாள்
கண்டொத்த சொல்லினாள்
கரு நீல வேணி கணவன்
நீரொத்தத் தாமரை
நில வொத்தத் தாரகை
என்பதாய் ஒன்றி வாழ்ந்தார்.

அடுத்துள்ள வூரிலே
அரியனுக்கு அத்தையாம்
அவளுக்கு ஓர் அழகு மகளாம்
எடுப்பான தோற்றத்தின்
ஏற்றத்திலே மனம்
இச்சை கொண்டு அரியநாதன்

தன்னுடைய தாரமாய்த்
தளிர்க் கரம் பற்றவே
தையலை நாடி வரவும்
''முன்னவள் உள்ளவரை
முடியாது திருமணம்''
என்றவள் உறுதி சொலவே

அத்தையின் மகள் மீதில்
ஆறாத மோகத் தால்
அரியனும் சதி எண்ணினான்
நத்தத்தில் உள்ள பேர்
நால்வர் அறிந்திட
நல்லதோர் கதை கட்டினான்.

நீல வேணிக்குஉடல்
நெடுநாள் நலமின்றி
நிலைமாறி உருகுகின்றாள்
சாலவே உடல் தேரச்
சற்றிவள் இடம் மாறித்
தாய்வீடு சேர வேண்டும்''

என்றிவன் சொல்லியே
ஏந்திழையாளுடன்
இருள் வனம் புகுந்து போனான்
சென்றவன் அங்குள்ள
சேற்றுக் கிணற்றிலே
சேர்த்து அவள் முடிவு கண்டான்.

காதோடு காதாகக்
காதவழி சென்றவன்
காதலுறும் அத்தை மகளை
ஏதேதோ சொல்லி மணம்
இளையாளாய்க் கொண்டுதன்
எண்ணத்தை நிறைவேற்றினான்.

மாதங்கள் ஆறு ஆக
வளர்ந்து ஓடப் பழையனூர்
மறுபடியும் போக எண்ணி
ஈதுநாள் அறுவடை
இனிதே முடித்துப் பொருள்
ஈட்டுதற் கென்று சென்றான்.

வருகின்ற வழியிலே
வனத்தைக் கடக்கையில்
வந்தவினைக் கென்செய்குவான் ?
எரிகின்ற நீலியோ ?
இவன் பெற்றக் கூலியோ ?
இல்லை இவன் மனை விதானோ ?

தள்ளாடித் தள்ளாடித்
தனியாய் இருட்டில் வரத்
தன்னுடன் அவளும் வந்தாள்
உள்ளூரத் தன்னை யிவள்
ஒழிப்பதே உறுதி என்று
உண்மையில் நம்பலானான்.

தப்பிக்க வழியொன்றும்
தன்னறி வில் காணமல்
தளர்கின்ற நடைபோடுவான்
''எப்பத்தான் பழையனூர்
என்னை நீர் சேர்ப்பீர்'' என்று
இவள் அங்கு தடைபோடுவாள்.

## 3. பழையனூர் சேர்ந்தார்கள்

காட்டைக் கடந்த பின்
காரிருட் கிடையிலே
கடுகுபோல் ஒளி கண்டனன்
பாட்டையும் தோன்றவே
பழையனூர் வந்ததாய்
பற பறென்று இவன் ஓடினுள்.

செய்மையில் இவன்வரத்
தெருநாய் குரைத்திடத்
திபு திபென்றுஇவன் ஓடவும்
கைகளில் விளக்கோடு
கதவைத் திறந்து பலர்
கண்டனர் அரியன் வரவை.

''ஏனடா அரியனே,
ஏதிந்த இரவிலே
எப்படி நடந்து வந்தாய்?
தேனுன மனைவியொடு
தெருவிலே நிற்கிருய்
சேர்ந்துனே செல்வம்'' என்ருர்.

திண்ணையில் அமர்ந்தவன்
தெருவாரை நோக்கியிது
செப்பினுன் பலர் கேட்கவே
''உண்மையில் நடந்ததை
ஒளிக்காமல் சொல்கிறேன்
உடன் வந்தாள் மனைவியல்ல.

''என்னுயிர் வாங்கவே
என்னோடு வந்தவள்
அவளை நீர் நம்ப வேண்டாம்
முன்னாளில் நான் செய்து
முடித்திட்ட வினையொன்றை
முடிபோட்டு எனை வாட்டுவாள்''.

என்றிவன் சொல்லவும்
இரு கண்ணும் நீர் சொரிய
ஏந்திழை மொழியலானாள்.
''இன்றிவர் கைவிடில்
எங்குநான் போகுவேன் ?
இவர்க்கென்ன தீங்கு செய்தேன் ?

இருக்கின்ற காலம் வரை
இவரோடிருந்த படி
என் காலம் கழித்துவிடுவேன்
உருக்குன்றிப் போய் நோயில்
உருகி வரும் எனைக் காக்க
உமை நாடி ஈங்கு வந்தேன்.

அருள்கூர்ந்து எனைக் காத்து
ரட்சிக்க வேண்டு மிங்கு
ஐயன்மீர் என்று சொல்ல
மருள் கூர்ந்த விழியினால்
மற்றுளோர் யாவரும்
மனம் நெகிழ்ந்திவனை நோக்கி

ஆயிரம் உமக்குளே
அரியனே இருந்தாலும்
அதற்காக வெகுளலாமோ ?
போயிருந் துணவினைப்
போசனம் செய்குவீர்
பொழுதோடு துஞ்சி வருவீர்''

என்றலும் அரியனே இடருற்ற
நெஞ்சனாய்
''எல்லோரும் அறியச் சொல்வேள்.
கொன்றெனைப் போடவே
குறியாக நிற்கிருள்
கூற்றமாய் வந்த கொடியாள்.

''அன்புளம் கொள்வீர்'' என்று
அறற்றினள் ஆனலும்
அவர்களோ விடுவதில்லை.
துன்பமே செய்வாளோ
தொட்டு நீ ஏற்றவள் ?
துயரத்தை நீக்கி விடுவாய்.

''அங்ஙனம் நின்னுயிர்
அழிவதைப் பார்ப்பமோ
''ஆணையிட்டு உறுதி சொன்னேம்.
செங்கனல் மூட்டியிம்
முந்நூறு பேரும் அதில்
சேர்கிறேம் தவற மாட்டோம்''

என்று அவர் சொல்லலும்
இவன் வேறு வழியின்றி
ஏகினன் அறையினுள்ளே
நின்றவர் அவ்விரவு
நேர்ந்த வகை பலபேசி
அவரவர் வீடு போந்தார்.

o o o

## 4. அன்று இரவு

சிறு விளக்கு ஒருபுறம்
செவ்வொளி சிந்திட
சித்தத்தில் அச்சமேவ
அரியனும் அறையிலே
அடுத்தென்ன நேரும் என்று
அவள் முகம் பார்த்து வருவான்

அடுப்பிலே விறகில்லை
ஆனாலும் எரிவதேன்
அவள் காலை நீட்டுகின்றாள்
வெடிக்கின்ற ஓசையுடன்
விறகுபோல் அவள் கால்கள்
வெந்தழல் போல் எரிவதேன்.

வைத்த கண் வைத்த படி
வளர் எரியைப் பார்க்கிறான்
வார்த்தையோ எழவு மில்லை
ரத்தம் போலே பொங்கிப்
பாத்திரம் வழிந்திட
இடக்கையால் அதைக் கிளறுவாள்

உறத்துத்தான் கூவிவிட
முனைகிறான் ஆனாலும்
உள்தொண்டை மறுக்கின்றதேன் ?
சிறுத்தைபோல் அவள் கண்கள்
செங்கனல் சொரிவதேன்
செய்கையோ பதைக்கின்றதே

படபடென் ஞெரு வௌவால்
பக்கம் பறந்தது
பக்கென்று மூச்சு நிற்க
உடன் அங்கோர் ஆந்தையும்
ஓர் எட்டு முறை அலற
ஊழிப் போய்க் கூத்துப்போல

ஓஹோஹோ என்று அவளும்
உறுமிப் பெருத்து ஓங்கி
உச்சியைத் தொட்டு நின்ருள்
ஆகாரம் என்றங்கு
வைத்துள்ள தத்தனையும்
அகல்வாயில் போங்குமென்ருள்

கோரப் பல் இடையிலே
கொப்புளிப்பது போலக்
குருதிதான் பொங்கி வழிய
கோரப் பல்நற நறெனச்
சிறிக் கடித்திடச்
செங்கனல் கண்கள் உமிழ

பட்டென விளக்கவியப்
பார்க்கின்ற திக்கெல்லாம்
பரந்தவள் ஆடி வருவாள்
எட்டாத உயரத்தில்
எலும்பாட மேலெல்லாம்
எரியாடச் சாடி வருவாள்.

''ஏஹேஹே! யாரடா?
என்னை நீ தப்பித்தே
எழுந் தோடல் ஆகுமோடா?
மாகாளி நானடா
மார்பைக் கிழித் துண்ணும்
பழையனூர் நீலியேடா

''கெக்கெக்கே, அன்று நீ
கிணற்றிலே தள்ளினாய்
கிளிபோன்ற நீல வேணி
ஒக்கவே அவள் உடல்
உள்ளே புகுந்து உன்றன்
உயிர் வாங்க இங்குவந்தேன்

வஞ்சனை செய்து நீ
வாயிலா மனைவியை
வதைத்துளே கொண்டு கொன்றாய்
கொஞ்சமோ செய்தனை
கொடியனே அன்றுநீ
கொண்டதை முடித்து நின்றாய்.

''நம்பியே உன்னிடம்
நாளெலாம் வாழவே
நண்ணிய பெண்ணை அன்று
வெம்பகை எண்ணினாய்
வேதனை பண்ணினாய்
விடுவனோ உன்னை இன்று

''எத்திக் கிணற்றிலே
ஏந்திழை அலற நீ
இச்சகம் செய்து கொன்றாய்
குத்திப் பிளந்துனது
குடலைப் பிடுங்கியே
குருதியைக் குடிக்க வந்தேன்.

''ஆகாகா இங்கு நீ
அசையவும் முடியாது
அங்கத்தைக் கட்டி விட்டேன்
சாகாமல் இன்று நீ
தப்பிக்க முடியாது
சப்தம் நீ போட மாட்டாய்''

என்று அவள் அரியனை
இடுக்கிக் கரங்களால்
எற்றிப் புடைக்க வருமுன்
குன்றிய மனத்தினன்
கொண்ட தன்வினை எண்ணிக்
கும்பிட்டுக் கைகள் கூப்பி,

''அறுமுகக் கடவுளே
அன்று நான் செய்ததற்கு
அனுபவித் திறந்து போவேன்
சிறியனேன் செல்தமை
சிறுமையே ஆதலால்
சேர்கிறேன் நீலி வாயில்

''முடிவில் என் முடிவினை
முந்நூறு பேர்கண்டு
முடிவரே என்ன நீதி ?
கடவுளே அவர்களைக்
காப்பதோ உன் கடன்
கண்கண்ட தெய்வமே வா''

இது மனத் தெண்ணினன்
இதற்குள்ளே நீலியோ
இவன் மார்பைப் பிளந்துபோட்டாள்
''விதிவினைப் பயன் இது
விதிவினைப் பயனிது''
விண்டன திசைகள் எல்லாம்.

காலையில் ஊருளோர்
கதவுகள் திறவாமை
கண்டங்கு கூடி நின்றார்
மேலுற்ற சங்கையால்
விசையினல் திறந்தங்கு
வேதனையின் காட்சி கண்டார்

அரியனின் சடலமும்
அவனுடல் உதிரமும்
அங்கவன் அருகிலேயே
கருநீல வேணியின்
காயமும் கண்டனர்
கலங்கினர் மனதினுள்ளே.

## 5. ஊரார் தீப்புகுதல்

''உயிரினைப் போக்கவே
உலவுமோர் நீலி'' என்று
உள்ளதைச் சொன்னதெல்லாம்
பயலிவன் விட்டகதை
என்றே இருந்தோமே
பார் இங்கு நேர்ந்த தெல்லாம்.

எல்லோரும் ஏமாற
என்னென்னவோ பேசி
எப்படி ஏய்த்து விட்டாள்?
பொல்லாத நீலி இவள்
பொய்ம்மைப் புரட்டிலே
புத்தியை மாற்றிவிட்டாள்

என்னதான் கேடு உனக்கு
ஏற்படப் பொறுப்பமோ
எரியிலே வீழ்வம் என்றோம்
சொன்னசொல் தவறாத
குடியிலே தோன்றினோம்
சொன்னதைக் காத்து மாள்வோம்

என்று அவர் கூடியே
இறைவனின் கோயில்முன்
எரிஅனல் மூட்டி விட்டார்
நன்று நீர் ஆடி அவ்
அரியனின் உடலுடன்
நங்கையின் உடலும் இட்டு

சேர்ந்தவர் முந்நூறு
பேரும் ஒவ்வொருவராய்
செந்தணல் வீழலானர்.
செந்தணல் நடுவிலே
தேவரும் பூதரும்
சேர்ந்தங்கு நடனமாட

தொந்து தொந்தோமென்று
சுழலுவிழி நீலியும்
தொந்தக் கவந்தமாட
சங்கரன் எழுந்தாட
டமருகத் திடியோசை
தாக்கவே மலைகள் ஆட

ஆகாசம் பூமி முதல்
அண்டமும் ஒன்றாக
அதிரவே எரிகள் ஆட
வேகாதி வேகங்கள்
மெத்தக் குறைந்தங்கு
வெற்றிடப் பாழ் தோன்றவும்

ஐயனும் தன்னூழி
ஆட்டம் தணிந்தங்கே
அம்மையும் ஆடிநின்றுள்
கையிலே வேலுடன்
கந்தனும் வந்தங்கு
களியுடன் அவளை நோக்கி

அம்மையே நின்னூழி
ஆட்டத்தின் பொருளினை
அறிந்திட வல்லர் ஆரோ
இப்பிறவின் நேரத்தில்
இங்குநீ ஆடவும்
என்னென்ன நேர்ந்ததம்மா !

''தெரியாமல் அறியனோ
தெரிவையைக் கொன்றனன்
தீர்க பழி என்று நின்றாய்
எரிவாயில் முந்நூறு
பேரையும் தீர்த்த தேன்
ஈதும் உன் கருணையாமோ ?''

என்றவன் உரைக்கவும்
இனிது கேள் முருகனே
ஈங்கிதில் புதுமையில்லை.
மன்றிலே ஆடுவார்
மாயை யீதல்லாமல்
மதியினால் அறிகொணுது.

## 6. மறுபடி உயிர்த்தெழுதல்

சதி ஒன்று செய்து ஒன்றைச்
சாதிப்பதென்பதுவும்
சரியான பாதையாமோ ?
விதியொன்று தன்னோடு
மேவி நின்றதன் பயன்
விளைக்காது தான் போகுமோ ?

சத்தியம் காக்கின்ற
தன்மையர் யாவரும்
சாவதற் கஞ்சினுரோ ?
மெத்தவே உலகினோர்
அறியவே செய்திட்ட
வேடிக்கை ஆடல் இதுகாண்.

என்ருலும் அங்குபார்
யாவரும் உயிருடன்
எழுகின்ற இன்ப நிலையை
என்றுமை மைந்தனுக்கு
இயம்பிய கதையினை
இசைத்தனன் இனிது வாழ்க.

# இசை வேளாளன்

## நான்காம் கதை

நாகப் பட்டிணம் போயிருக்கிறீர்களா நீங்கள்? கடல் பொங்கி வந்து ஊரை எல்லாம் ஏப்பம் விட்டதே அதைக் கேள்வியாவது பட்டிருக்கிறீர் களா? அந்த நாகப் பட்டணத்து வெள்ளம் என் உயிர் நண்பனுக்கு யமனாக வந்ததே அதையாவது அறிவீர்களா?

நண்பரா அவர்? என் இசைத் தொழிலுக்கே விதைப் போட்டுப் பயிராக்கிய உத்தமன் அல்லவா அவர்? நான் உண்ணும் ஒவ்வொரு பருக்கையும் அவர் இட்ட பிச்சை. அவருடைய நினைவு வந்துவிட்டது. இந்தக் கவிதையை அவருக்குக் காணிக்கை ஆக்குகிறேன்.

நான் இங்கோர் இசைவேளாளன்.
வழிவழி நாதங்கொண்டு
தேன் நிகர் சுரங்களாலே
திருச்செவி அமுதம் சேர்ப்பேன்.
என்னைப் பெரியவனாய்
இவ்வூரில் ஆக்கியவன்
தன்னை இழந்துவிட்டேன்
தவிக்கின்றேன் பாடுகிறேன்.

ஒலிக்குள்ளே உயிர்க்காற்றை
இழைகூட்டிப்
பாவாகக் கொட்டும் பாக்கியத்தை
யான் பெற்றேன்.
நாவார எனை வாழ்த்தி
நல்லாசி கூறியவன்
நமக்குள்ளே இன்றில்லை.
அவனை நினைக்கின்றேன்.

எத்தனையோ மனிதருடன்
நான் பழகி யிருந்தாலும்
எனக்கென்று நீ பிறந்தாய்
எனக் கென்றே நீ இருந்தாய்.
உத்தமனே உன்னைப் போல்
ஒரு ரசிகன் நான்இனிமேல்
உலகத்தில் காண்பேனோ ?
உன் குரலைக் கேட்பேனோ ?

தோடிக் கீர்த்தனைக்கே
துடிப்பாக விரலசைப்பேன்
தொண்ணூறு முறை என்னை
பேஷ் என்பாய் ஆர்ப்பரிப்பாய்.
பாடி முடித்தவுடன்
பாவனையாய் மோகனத்தைப்
பாடென்பாய் நான் பாடப்
பலகாலும் நீ ரசிப்பாய்.

உன்னை மகிழ்விக்க
ஊரறிய நான் வளர்ந்தேன்
ஒத்தூதி வந்த என்னை
உயர் கலைஞன் ஆக்கிவிட்டாய்.
தன்னந் தனியாக
நான் படிக்கும் கீதமிங்கே
தளர்வுற்றுப் போய்விடவோ
யார் ரஸிப்பார் நாயகமே ?

சிவாளி நான் எடுப்பேன்
நாயனத்தில் வைத்ததிலே
தெம்மாங்குப் பாட்டிசைத்தால்
தேர் கூட நின்றிடுமே.
பூமாலை போட்டெனக்குப்
பொன்காசு நீ அளிப்பாய்
போஜ மகாராஜன் உனைப்
பூமியிலே காண்பேனோ?

பூபாளம் பாடி உன்றன்
பொன்வாசல் நான் வருவேன்
புத்தாடைக் கதர் எடுத்துப்
பொல பொலென விடியுமுன்பே
தீபாவளிப் பரிசாய்
எனக்களித்து நீ மகிழ்வாய்
சிறப்பாக வாழ்த்துவையே
யார் செய்வார் அதுபோலே.

அன்றாடம் காலையிலே
ஆசிரியன் துதிபாடி
அவர் தந்த நாதசுரம்
அழகுறவே வாய் பதித்துக்
குன்றாமல் கனராகம்
அத்தனையும் பாடியது
குணக்குன்றே உனக்கன்றோ ?
ஊக்கிவிட யார் வருவார் ?

நாகைக்குச் சென்று விட்டு
நான்காம் நாள் வந்திடுவேன்
நண்பர் ஒருவர் உடல்
சுகமில்லை என்றவன் நீ.
சோகக் கடல்பொங்கிச்
சுழித்தூரை விழுங்கியதாம்
சூழ்ச்சியிலே நீ சிக்கி
எவ்விடந்தான் போனாயோ ?

காவேரி நதிவெள்ளம்
கரை புரண்டே ஓடியதில்
காலத்தின் ஊழியிலே
கால் வழுக்கிப் போனாயோ ?
சாவேரி ராகத்தில் சஞ்சாரம்
செய்கையிலே
சரியான லயம் வழுக்கிச்
சலிப்பில் மனம் நோகுதையா.

பல்லாண்டு நீஇருந்து
பக்கத் துணையாகப்
பாட்டைச் சுவைத்திருக்க
பலகாலும் வேண்டி நின்றேன்.
கல்யாணி ராகத்தில்
கைவிரல்கள் ஓடாமல்
கல்லாய்ச் சமைந்திருந்து
கருத்தழியச் செய்துவிட்டாய்

சூராவளிக் காற்றில்
சுழன்றலைகள் ஊர் புகுந்து
சுருக்குக் கயிறிட்டுக்
குடிசையெலாம் கொண்டுசெல்லும்.
பேராபத்துக் கிடையில்
பெரியோனே சிக்கினையோ ?
பேராளன் எப்படித்தான்
எனைவிட்டுப் பிரிந்தனையோ ?

கம்பனுக்குச் சடையனைத்தான்
கைகொடுத்தான் என்பார்கள்.
கவிதைகளை ஆதரிப்பார்
சுணக்கின்றி யிருப்பார்கள்.
தெம்பாக நாயனத்தைச்
செவி கொடுத்தே ஆதரிப்பார்
தேசத்தில் உன்னைப் போல்
ஒரு சிலரே இருப்பார்கள்.

சங்கீதப் புலி எங்கள்
ராஜரத்னம் பிள்ளைக்குத்
தமிழ்வளர்த்த சுப்புவைப் போல்
தரணியிலே யாரிருந்தார்?
மங்காமல் இசைவெள்ளம்
'வாழ்வெல்லாம் உன்போன்றோர்
வாய்திறந்து வாழ்த்துவதால்'
என்றுனக்குக் கூறுகிறேன்

எல்லோரும் உனைப்பேலே
இருப்பாரோ நானறியேன்
என்துணையாய் என் உயிராய்
என்பாட்டாய் நீ இருப்பாய்
மல்லாரி ராகத்தில்
நடைபோட்டு நான்பாட
மறைவாக நீ என்னை
வாழ்த்திடுவாய் நான் அறிவேன்.

நீவாழ்த்தி நான் எடுத்த
நாதசுரத் துள்ளிருந்து
நின்று தவழ்ந்துவரும்
நேர்த்திமிகு சங்கீதம்
பூவைத்துன் பாதத்தைப்
புகழ்ந்து தமிழ் பாடும்.
பொன்னுருவம் எனக்குள்ளே
சபாஷ் போடும் அதுபோதும்.

கலைமகளின் சிர்பதங்கள்
கைவடித்த சொற்களிலே
கானமழை பொழிந்து
கமனியமாய்ச் சொக்கவைக்கும்
நிலையாக என்பாட்டு
நின்றிலங்கும் கோவிலெலாம்
நீ மட்டும் எங்கிருந்தோ
பேஷ் என்பாய் அதுபோதும்.

# சிலை சிரித்தது

## ஐந்தாம் கதை

மக்களின் மனத்தைத் திசைதிருப்ப சிலர் ஜால வித்தை செய்கிறார்கள். எல்லோருக்கும் இந்த வித்தை எளிதாக வருவதில்லை. அதனால் மக்கள் இவர்களை அதிசயிக்கிறார்கள்.

ஜால வித்தையை சிலர் தொழிலாகவே வைத்து நடத்துகிறார்கள். சிலர் சமய பிரசாரத்திற்காகப் பயன்படுத்துகிறார்கள். நாத்திகவாதிகளும் தம் பிரசாரத்துக்குப் பயன்படுத்துகிறார்கள்.

மக்கள் அவரவர் நோக்கத்தைத்தான் கவனிக் கிறார்கள். அதற்குத் தகுந்த மதிப்பைத்தான் கொடுக்கிறரார்கள்.

இக்கதை வெறும் கற்பனையே.

அண்ணா நெடுஞ்சாலை,
அல்லோல கல்லோலம்
எண்ணாத அளவுக்கு
எங்கிருந்தோ பெருங்கூட்டம்.

அதிசயங்கள், அற்புதங்கள்
அளவில்லாச் சாதனைகள்
புதிதாகச் செய்கின்றார்
புகழ்மிக்க நம் செழியன்.

'புட்டபர்த்தி செய்யும்
பொய் வேசம் கலைகிறது'
கொட்டை எழுத்தினிலே
குவியும் விளம்பரங்கள்.

o o o

முற்றிவரும் பக்தி மூலைக்கொரு கோவில்
இற்றைநாள் எங்கும் இழைந்து வரும் வேளை

கடவுள் என ஒன்றில்லை
கற்பித்தவன் முட்டாள்
திடமான ஈ.வே.ரா. சிலை கீழே எழுத்துக்கள்.

ஒருபக்கம் கோவிலிலே
ஒருகோடி அர்ச்சனைகள்
மறுபக்கம் ரம்சானின்
மசூதியிலே மணிவாக்கு

மேடைகட்டி அரசியலின்
மெய்யான வாக்குறுதி
கூடிவரும் கூட்டம்— ஒரு
கொள்கை இருக்காது.

o o o

சென்னையிலே சிலநாள்முன்
பாபா வந்திருந்தார்.
மின்னல் சுவைக் குரலில்
வேதவுரை தந்திருந்தார்.

ஆயிரமாய்க் கூட்டம்
அனுதினமும் தேடிவரும்
வாய் மணக்கும் நல்லுரையை
மனமகிழக் கேட்டிருக்கும்.

சொல்லவந்த நல்லுரையைக்
கேட்டவரோ சிலபேர்கள்
அல்லாமல் அவர்பெருமை
அளந்தவரோ பலபேர்கள்.

கைமூடித் திறந்தவுடன்
திருநீற்றைத் தருவாராம்
தைமாதம் வாய்வழியே
சிவலிங்கம் எடுப்பாராம்.

உள்ளங்கை மணல் அள்ளி
ஒரு கீதை செய்வாராம்
உள்ளிருக்கும் பொருள்தானே
வெளிக் கொணர்வார் என்பார்கள்.

பாபாவின் பக்தர் இதை
மறுப்பார்கள் சினம் கொள்வார்
தீபாயும் எழுத்தில் இதைப்
பத்திரிகை வெறிமூட்டும்.

o o o

செழியன் அதிசயங்கள்
சென்னையிலே செய்வாரா?
அறியாத நாத்திகத்தின்
அடிப்பொடிதான் தெரியாதா?

சத்திய சாயிக்குச்
சவ்வாலா விடுகின்றார்?
புத்தி கலங்கிவிடும்!
புகன்றிடுவார் சில்பேர்கள்.

''தெய்வத்தின் பேர்செல்லித்
திரட்டுகிறார் பெரு நிதியை
பொய் புரட்டுச் சாமிகளைப்
புறங்கொள்வார் நம் செழியன்.

கை வித்தை காட்டும்
கண்கட்டு வேலைஎல்லாம்
பொய் வித்தை யாக்கப்
புகழ்ச் செழியன் வந்துவிட்டார்.''

என்றுரைக்கும் ஒரு கூட்டம்
இன்று கிளம்பியது.
மன்ற மொன்றில் மேடைகட்டி
வாழை விளக் கேற்றியது.

கூட்டம்! படுகூட்டம்!
கொந்தளிக்கும் கடலாச்சு!
நீட்டுக் கார் ஒன்றில்
நம் செழியன் வந்தாச்சு!

கை தட்டல்! ஆர்ப்பாட்டம்!
கண்கொள்ளாக் காட்சியிடை
பை கெட்டுப் போகாமல்
பார் என்றும் எச்சரிக்கை!

மேடையிலே திரை விலகி
மின்னல் விளக் கெரிகிறது
காடான முடித் தலையில்
காசாயம் நடக்கிறது.

செக்கச் செவேலென்று
செவ்வாடைக் கவுனுக்குள்
பக்காவாய்ப் பாபா
பைய வருகின்றார்.

''பாபாவே பேசுகிறார்
பாருங்கள் மேடையிலே''
தூபமிடும் ஆட்கள்
துள்ளிக் குதிக்கின்றார்.

''என்றன் அருள் சக்தியினால்''
எவர் நோயும் போக்கிடுவேன்
குன்றாத பக்தியினை வையுங்கள்
அதுபோதும்.

திரு நீற்றைத் தண்ணீரில்
தினமும் குடித்து வந்தால்
மறு மாற்றம் நீர்பெறுவீர்.
மந்திரத்தின் சக்தியிது''

சொல்லி முடிக்கவில்லை
ஒருகிழவர் எழுந்திருந்தார்.
வெளிவந்தார் முன்னாடி
சலசலப்புக் கூட்டத்தில்

''சாய்பாபா, அருள் வேண்டும்.
சற்றென்னைக் காப்பாற்றும்
தீபாயும் வயிற்றுவலி
தீர்த்துவிட வேண்டுமையா''

'மேடைச் சிவத்தையா'
மெல்லச் சிரித்தார்கள்.
நாடிப் பெரியவரைத்
தாங்கினார் வாஞ்சையுடன்.

தலையில் குடுமியுடன்
நின்றிருந்தார் அக்கிழவர்.
விலைபோகும் செங்கடுக்கன்
மேலங்கி தாங்கியவர்

நெற்றியிலே நீறும்
நிழலாடும் குங்குமமும்
அட்டைக் கருங்கோட்டும்
அணியாகக் கொண்டிருந்தார்.

ஆசைக்கு அணிகலனாய்
அழகான சுருள் மீசை
பேசத் தெரியாத
படுபட்டிக்காடென்னலாம்.

''வற்றாத வயிற்றுவலி
வைத்தியங்கள் பார்த்துவிட்டேன்.
சற்றேனும் தணியவில்லை
சாய்பாபா என் செய்வேன் ?

பட்டணத்தைச் சார்ந்து
பலமாதம் கழித்தாச்சு
இட்ட பயிர் என்னாச்சோ
என்வலிதான் தீரலியே

சென்னைக்குப் போய்ப்பார்த்தால்
சாய்பாபா வருவாரு.
உன்குறையை அவர்பார்த்து
உடனே தீர்த்திடுவார்.

மாமன் மவன் சொன்ன
வார்த்தையினை நம்பிவந்தேன்
ஏமாந்து போவேனா
என்குறையைச் சொல்லிவிட்டேன்''

செவ்வுடையார் இதைக்கேட்டார்
சிந்தித்தார் சில கணந்தான்
கையை அசைக்கின்றார்
கண்டெடுத்தார் ஒருபொருளை !

பச்சை நிறத்தினதாய்
படிகத்தில் ஆனதுவாய்
மெச்சும் திறத்தினதாய்
மிக அழகாய்ச் சிறியசிலை.

கண்ணைச் சிமிட்டுவதாய்
கைவண்ணம் சேர்ந்ததுவாய்
எண்ணத்தை ஈர்ப்பதுவாய்
பிள்ளையார் வெளிவந்தார்.

மேடைமேல் நின்றபடி
மேலாக அதைத்தூக்கி
''வாடும் பெரியவரே
வந்திதனைப் பெற்றிடுவீர்

நித்தம் இதை நீங்கள்
இரண்டுமுறை பூசித்தால்
பத்தாம்நாள் வயிற்றுவலி
பறந்துவிடும் பார்த்திடலாம்''.

புகைப் படங்கள் ஆங்காங்கு
பொலபொலென வெளிச்சமிட
மிகப்பணிவாய் அதைக் கிழவர்
மேடையிலே தாம் பெற்றார்.

அடுத்தடுத்துப் பலநிகழ்ச்சி
அரங்கத்தில் நிறைவேற
முடிவுரையைக் கழகத்தின்
முதல்வர் பேசியபின்

தலைமுடியும் செவ்வுடையும்
பாபா அகற்றுகிறார்
பலரும் அதிசயிக்கச்
செழியனாய் மாறுகிறார்.

''இதுவரையாம் செய்ததெலாம்
இரஸவாத வித்தையில்லை.
புதிதில்லை. பழந்தமிழர்
போற்றிவந்த சிறுகலையே.

தெய்வத்தின் பேர்சொல்லித்
திரிகின்றார் சாய்பாபா.
பொய்வேசம் கலைத்திடவே
புரிகின்றேன் இதையெல்லாம்''

சிற்றுரையை முடித்துவிட்டுச்
செழியன் திரும்புகிறார்
கற்றைப் பெருங்குடுமிக்
கனவானைக் காணவில்லை.

''ஐயய்யோ, ஆள் எங்கே?
அம்பேலாய் ஆகிவிட்டார்
ஐயாயிர ரூபாய்
அழகுச் சிலை போச்சே''

அடியார்கள் நான்குபுறம்
வலைபோட்டுத் தேடுகிறார்
நொடிப்பொழுதில் சிலைமறைய
நகர்கிறது பெருங்கூட்டம்.

''பாபாவைப் பழித்ததனால்
பாவம் பெருநஷ்டம்
ஊர் பேர் தெரியாதாம்
ஓடிவிட்டான் சிலைபோச்சு''

''தெரியாதா செழியனுக்கு
திரும்பக் கொணர்ந்திடுவார்
அரைகுறையாய்க் காதில்விழ
அசைகின்றார் நம் தலைவர்

ஆறேழு வருடங்கள்
அசைந்தே உருண்டாலும்
ஊரூராய் நம்செழியன்
உரை நிகழ்ச்சி தொடர்கிறது.

o o o

எங்கோ ஒரு சிற்றூர்
எடுப்பான திருக்கோவில்
தங்கக் கலசத்தைச்
சார்ந்த குடமுழுக்கு !

பத்திரிகை விளம்பரங்கள்
பக்திபத்தி அறிவிப்பு
முத்திரையாய் ஒருபெரியார்
முழுபடமும் அதில்பதிப்பு.

செழியன் கவனத்தைத்
திசைதிருப்பி, இது கவர
விழைவுற்றார் அவ்வூரில்
வேடிக்கை காட்டுதற்கே.

o o o

தெருவெல்லாம் பெருங்கூட்டம்
தெப்பவிழா நடக்கிறது.
சரவிளக்குக் கோபுரத்தில்
சதிர்நடனம் படிக்கிறது.

ஒலி பெருக்கி மதிற்சுவரில்
ஓங்காரம் செய்கிறது.
தலைவர் பேச்சுக்குக்
கட்டியங்கள் செய்கிறது.

o o o

''சிற்றூரில் வாழ்பவரே
செல்வர்களே தாய்மாரே
வற்றாத வளமெல்லாம்
நம்கடவுள் தருகின்றார்.

என்றும் இருப்பவர்கு
எடுக்கின்றோம் நாம்கோவில்
நன்றிக் கடனுக்கு
நல்லவிழா தொடுக்கின்றோம்

இப்போதிங் குள்ளாரே
எழில்பிள்ளை யார்த்தெய்வம்
முப்போதும் சத்தியமாய்
முன்னைவினை தீர்த்திடுவார்.

''யான் ஓர் விவசாயி
அக்காலம் ஓர் ஏழை
பேனா பிடித்தறியாப்
பெருமூடன், நோயாளி.

வயிற்று வலியாலே
வாடினேன் பலநாளாய்.
வயித்தியத்தைப் பார்க்கச்
சென்னைக்குப் போயிருந்தேன்

பாபா வந்திருந்தார்
பரவசமாய் நான் போனேன்
காப்பாற்றச் சொல்லிக்
காலில் விழுந்தெழுந்தேன்

பிள்ளையார் இதைத்தந்து
பெருங்குறையை நீக்கிவிட்டார்.
தொல்லை கொடுத்து வந்த
வயிற்று வலி போச்சு

நல்ல விளைச்சலினால்
நாளும் நான் உயர்ந்தேன்
வல்ல கணபதிக்கு
மண்டபத்தைக் கட்டி வைத்தேன்.

நெஞ்சாரப் பூசையிட்டேன்
நிலைமை உயர்வாச்சு
பஞ்சாயத் தலைவரென
பதவி உயர்ந்துவிட்டேன்

பாபாவை வரச் சொல்லிப்
பாலாலே அபிசேகம்
சீராகச் செய வேண்டும்
தெரியலையே முகவரிதான்

எங்கே இருந்தாலும்
இங்கிருப்பதாய் எண்ணி
சங்காபிசேக முதல்
செய்கின்றோம் ஊர் வாழ.''

o o o

ஒலிபெருக்கி முன்னாலே
ஒருமனிதன் இதைக் கேட்டுக்
கலகலவெனத் தான் சிரித்துக்
கோயிலுக்குள் நுழைகின்றான்.

வணங்காத மனிதனையும்
வரவேற்றார் ஆனைமுகன்
''சிணுங்காதே உள்ளே வா.
செழியா நலந்தானா?

நன்றாக எண்ணிப்பார்
நானேதான் ஈங்குள்ளேன்''
என்று சிரிப்பது போல்
எம்செழியன் காணுகின்றார்.

நானாகத் தந்த சிலை!
நானாகத் தந்த சிலை!
தானாகச் செழியன்கை
கூப்பித் துடிக்கிறது!

—

# மல்லிகை

## (ஒரு ஆங்கிலக் கதையின் தழுவல்)

மல்லியைப் பற்றி...

அவள் மல்லிகை விற்கும் குழந்தைப் பெண். எல்லோரும் தான் மல்லிகைப் பூ விற்கிறார்கள். இருந்தாலும் அவளிடம் ஒரு முழம் பூ வாங்குவதில் எத்தனை இன்பம்.

எனக்குக் குறைந்த வருமானம் தான். வருமானத்துக்குள் செலவு செய்ய வேண்டும் தான். என் கோபக் கனலில் அந்த மல்லிகைப் பூதானா கருக வேண்டும்?

கதவினைத் தட்டும் மெல்லோசை என்
காதில் படுகிறது.
நிதமும் நிதமும் கேட்கும் இவ்வொலி
நெஞ்சை அறுக்கிறது.

சின்னஞ் சிறிய பிஞ்சு விரல்கள்
செய்திடும் கதவோசை.
மின்னல் வேகமாய் உள்ளே விரைந்தென்
மனைவியை அழைக்கிறது.

''மல்லி வந்தாச்சு, மகளே இருமுழம்''
மல்லிகை வாங்கிவிடு.
முல்லையரும்போ குண்டுமல்லியோ
முதலில் விலைபேசு,

செண்டா யிருந்தால் பிரித்துப் பாரு
மனைவியின் உத்தரவு.
இரண்டேநொடியில் சுந்தரி போனாள்
இருமுழம் வந்தாச்சு!

காலை மாலை இருவேளை இக்
கதவொலி தவறாது.
மாலை மாலையாய் மல்லிகை வீட்டில்
வருவதும் தவறாது.

மல்லிகை விற்கும் தொழிலால் இவளுக்கு
மல்லி எனும் பெயரா— இல்லை
மல்லிகை போன்ற மென்மையைக் கருதிப்
பெற்றோர் இட்டாரா?

அளந்து பார்த்தால் சாண் அளவில்லை
அத்தனை சிறு கைகள்
குழந்தை மல்லிகை அளக்கின்றாள்— தன்
குட்டி முழத்தாலே.

சித்திரக் கையால் அளப்பதில் எவரும்
சித்தம் மயங்குகிறார்.
கொத்தவரங்காய் விரலால் கிள்ளிக்
கொசுரும் தருகின்றாள்.

மல்லிகைவிற்றே வயிறு வளர்க்கும்
மல்லியைக் கண்டிறங்கி
நல்ல ரிப்பனைப் பரிசாய் அளிக்கச்
சுந்தரி முன்வந்தாள்.

பட்டுரிப்பனைப் பின்னலில் முடிந்தால்
பார்வைக் கெடுப்பாகும்.
கிட்டே வருவாய் நானே முடிப்பேன்''
சுந்தரி கேட்கின்றாள்.

''தங்கையும் தம்பியும் பார்த்தால் தமக்கும்
தாவெனக் கேட்பாரே
எங்கே போவேன் மேலும் இரண்டு
ரிப்பன் கிடைக்காதே

''மல்லிகை விற்றால் காசு கிடைக்கும்
அரிசியை வாங்கிடலாம்.
நல்லா யிருப்பாய், ரிப்பன் வேண்டாம்''
நகர்ந்தாள் மல்லிகையும்.

தந்தையாரோ தாய்தான் யாரோ
தாங்கிட எவருண்டு?
சிந்தையில் ஆயிரம் ஆசையிருந்தும்
சிதைகிற நிலையுண்டு.

வீட்டுச் செலவை நானும் மனைவியும்
இரவே கணக்கெடுத்தோம்.
ஏட்டுச் சுரைக்காய் கறிக்குதவாதென
யாரோ சொன்னார்கள்.

கூட்டிக் கழித்து வகுத்துப் பார்த்தோம்
குவிந்தது செலவொன்றே
நீட்டிய மல்லிகைப் பட்டியல் மட்டும்
இருபது ரூபாயா ?

''நாளையிலிருந்து மல்லிகை வேண்டாம்
நிறுத்திடு'' என்றேன் நான்
''சாலையில் வருவோர் போவோர் பிழைக்கவா
சம்பளம் வருகிறது''

இரவு முடிந்து பொழுது விடிந்தது
என்றும் நடப்பது போல்
தெருவைப் பெருக்கிக் கோலமிழைத்துச்
சுந்தரி வருகின்றாள்.

கதவினைத் தட்டும் மெல்லோசை என்
காதில் படுகிறது.
நிதமும் நிதமும் கேட்கும் இவ்வொலி
நெஞ்சை அறுக்கிறது.

சின்னஞ்சிறிய பிஞ்சு விரல்கள்
செய்திடும் கதவோசை
மின்னல் வேகமாய் உள்ளே நுழைந்து என்
மனைவியை அழைக்கிறது.

ஓசைப் படாமல் கதவைத் திறக்க என்
உத்தமி ஓடுகிறாள்.
ஆசை ரோஜா அடியே சுந்தரி
கண்ணைப் பறிப்பது பார்.

மல்லிகை இல்லை ரோஜாப் பூக்கள்
சுந்தரி ஓடுகிறாள்.
சில்லென வாசம் நெஞ்சை இழுக்கச்
சிறுமியும் நிற்கின்றாள்.

''இன்றே மலர்ந்த ரோஜாப் பூக்கள்
இதுதான் முதல் போணி
நன்றாயிருக்கும் வாங்குங்கம்மா''
என்றாள் மல்லிகையும்

இறக்கிய கூடையில் எடுப்பாயிருந்த
இருபது ரோஜாவை
நறுக்கென சுந்தரி எண்ணி எடுத்ததை
நானும் பார்க்கின்றேன்.

''பூவும் வேண்டாம் ஒன்றும் வேண்டாம்
போய்விடு கழுதைகளா''
நாவின் மேலே பல்லைப் போட்டு
நானோ கத்துகிறேன்.

ஐயா, வீட்டில் கஞ்சியும் இல்லை
அளிப்பது முதல்காசு
வையாதீங்க வயிற்றுக்கில்லை
மல்லிகை கெஞ்சுகிறாள்.

இருபது ரூபாய் மாதச் செலவு
இந்தப் பூவிற்கா
சருகாய்ப் போகும் மாலைக்குள்ளே
எழுந்திரு போவெளியே.

கத்திக் கொண்டே வெளியே வந்தேன்
காலில் பட்டவுடன்
மொத்தப் பூவும் தரையில் கவிழ்ந்தது
முழுவதும் மண்ணாச்சு.

மலங்க மலங்க விழித்தாள் சிறுமி
மலரை அள்ளுகிறாள்.
கலங்கிய கண்களில் கண்ணீர் துளிக்கக்
கையால் எடுக்கின்றாள்.

காலையில் மலர்ந்த ரோசா மலரின்
இதழ்கள் சிதறிவிட
மேல் சட்டையினால் கண்ணைத் துடைத்து
மல்லிகை நடக்கின்றாள்.

ஆசைக் கனவுகள் அரும்பும் முன்னே
மண்ணாய் மாறியது.
''பாசம் வேண்டாம் பற்றும் வேண்டாம்
நாசம் விளைப்பானேன் ?

எத்தனை செலவுகள் கணக்கில்லாமல்
எதை எதைச் செய்கின்றோம்.
கத்தத் தெரியும் குழந்தைகளிடத்தில்
கருணை வேண்டாமோ ?''

சொல்லிக் கொண்டே ரூபாய் இரண்டுடன்
மனைவி அழைக்கின்றாள்
மல்லியின் கால்கள் திரும்பவே இல்லை.
மாலையும் வரவில்லை.

கதவினைத் தட்டும் மெல்லோசை இனி
காதில் விழுந்திடுமா ?
நிதமும் நிதமும் இவ்வொலிக்காக என்
நெஞ்சம் அழுகிறது.

o o o

# சீதாலட்சுமி

## (முதற் பகுதி)

முகவுரை :

இவள் படித்தவள். உயர்ந்த குலத்தில் தோன்றியவள்தான். முன்னேற்றக் கோட்பாடும் உடையவள். இருந்தாலும் சமுதாயத்தில் பல பிரச்சனைகள். வரதட்சணைக் கொடுமை, கலப்பு மணத்தில் முடிகிறது.

இவளுக்கு மட்டும் தோன்றிய கொடுமைகள் இவளைக் கொலைகாரியாகவும் ஆக்கிவிடுகின்றன. இவள் எடுத்த முடிவு சரியா ?

ஊரில் பலபேர் பலவிதம் பேச—
அப்படி என்ன செய்தாள்?
''உத்தமி சீதாலட்சுமி'' என்கிறார்—
இப்படி ஒரு பேச்சு!
கோரக் கொலைகள் செய்தவள்
இவள்தான்— என்பார் ஒருசாரார்!
கொடியவள் இவளை நெருங்காதீர்-எனக்
குறிப்பார் மறுசாரார்!

சென்னையில் இவள் ஒரு பள்ளியை
அமைத்து நடத்தி வருகின்றாள்.
சிறப்புற நடத்தும் திறமைக்காகப்—
பதக்கமும் பெறுகின்றாள்!
முன்னே இவள் ஒரு குடும்பப் பெண்ணாய்
இருக்க விரும்பியவள்,
முறையாய் இவளை வாழவிடாமல்—
தடுத்ததை யார் அறிவார்?
(ஊரில் பலபேர்)

சீர்காழியிலே சீனு வாத்தியார்—
தெரியாதவர் இல்லை.
சீதாலட்சுமி அவருக்கொரு பெண்—
படிப்பில் படுசுட்டி.
நேர்மையும் அன்பும் சேர்த்து வளர்த்த
தந்தையின் அரவணைப்பில்
தேர்வில் எல்லாம் முதலாய் வருவாள்
சின்னஞ் சிறு வயதில்.

அம்பத்தூரில் இவளுக் கிணையாய்
ஆசிரியப் பணியில்
ஆறுமுகம் எனும் நண்பர் சேர்ந்தார்
அழகாய்ப் பேசிடுவார்.
நம்பிக்கைக்குப் பாத்திரமாக
நாட்கள் உருண்டோட
நலமாய் இருவரும் திருமணம் காண
நாளும் இசைந்தார்கள்.

ஆறுமுகம் ஒரு தாழ்குலம் சார்ந்த
அரிசனர் என்றாலும்
ஆற்றும் பணியில் சமமே அவரும்
ஆசிரியர் தானே ?
வேறு குலத்தார் ஆகிலும் என்ன ?
மணக் கொடை வேண்டாமே
விதவிதமான நகைகள் எதுவும்
வேண்டாம் என்கின்றார்.

''தாயும் தந்தையும் இவருக்கில்லை
தனியாள் என்கின்றார்
சமுதாயத்தின் கொடுமைப் பிடியைச்
சாய்த்திட நான் வருவேன்
காயா மரமாய் நானிருந்தாலும்
காத்திட யார் வருவார்
காந்தி மகாத்மா காட்டிய வழியில்
செல்வதில் தவறில்லை''.

சீதாலட்சுமி கடிதம் எழுதினாள்.
திறந்த மனத்தோடு
சீனு வாத்தியார் சம்மதம் தந்தார
திருமணநாள் வைத்தார்.
வேத முறைப்படி திருநீர் மலையில்
மங்கலம் ஏறியது.
மேலாம் கடமை முடித்த வாழ்க்கை
புது மெருகேறியது.

அன்றே அரசின் விதிகள் படிக்கும்
பதிவுகள் செய்திடவே
அம்பத்தூரின் சார்பதிவாளர்
சான்றுகள் பெற்றனரே.
நன்றாய் இரும்போம் என்றே
நினைப்போம் நம்பிக்கை போனதில்லை;
நன்றாய் இருப்பதில் நாளும்
விதிக்கோ—நாட்டம் இருப்பதில்லை.

(இரண்டாம் பகுதி தொடர்கிறது)

## (இரண்டாம் பகுதி)

சீதாலட்சுமி அன்பைப் பொழிந்து
குடும்பம் நடத்துகிறாள்.
சென்னையின் மேற்கே சிறிதொரு வீட்டில்
காலம் கடத்துகிறாள்.
வேதம் வகுத்தத் திருக்குறள் ஒருபால்
மேலே தெரிகிறது.
விதவிதமான கவிதைத் தொகுப்பு
மேலும் விரிகிறது.

வெள்ளை வெளேரென நாலாபுறமும்
கண்களைப் பறித்திடவே
வெள்ளை யடித்த சுவருக் கிடையே
புத்தக அடுக்கங்கள்
பிள்ளைகள் இல்லாக் குறையைச் சொல்ல
நேரே உயரத்தில்
பெரிதாய்க் குழந்தையின் சித்திரம் ஒன்று
மெல்லச் சிரிக்கிறது.

சுவற்றில் கிறுக்கல் எதுவும் இல்லை
வைத்தது வைத்தபடி
சுழலும் விசிறி காந்த விளக்கு
இதுவே முன் கூடம்.
சிவப்பு நிறத்தில் ரோசாக் கொத்து
மேசை விரிப்பின் மேல்
இரண்டொரு வாரப்பதிப்பு சேர
விரிந்து கிடக்கிறது.

நல்ல குடும்பம் என்ற பெயரை
நாட்டிய நிலையோடு
நாளும் பள்ளியின் வளர்ச்சிக்காக
உழைப்பாள் முறையாக
புல்லுங்கூட அவளிடம் கற்றால்
புகழுடன் முன்னேறும்
புழுத்த சாதி வேற்றுமை ஏதும்
சிறிதும் ஆங்கில்லை,

கணவனுக்கன்பு காட்டுதல் ஒன்றே
கருத்தில் நிறைவாகிக்
காலையும் மாலையும் விளக்கினை ஏற்றிக்
கடவுளைப் பூசிப்பாள்.
அணையா விளக்காய் அகத்தில் இருத்தி
அவள் அங்கிருக்கையிலே
ஆறுமுகத்தான் பொறுப்பில்லாமல்
அனைத்தையும் மறந்திட்டான்.

கலப்பு மணத்தைக் காரணம் காட்டி
அரசுக் கெழுதியதால்
கனகத்தால் ஒரு விருது கொடுத்தார்
கைவசம் இருந்ததையும்,
சளிப்பில்லாமல் சீதாலட்சுமி
பள்ளிக் குழைத்ததனால்
தங்கம் பூசிய வெள்ளிக் கோப்பை
தன்னிடம் இருந்ததையும்

நண்பர்களோடு சீட்டாடியதில்
நறுக்கென் றழித்திட்டான்.
கண்கவர் மோதிரம் மனைவியின்
கைவளை— களத்தில் தொலைத்திட்டான்.
பண்பை இழந்தான் வீட்டுப் பொருள்கள்
பலவும் இழந்திட்டான்.
பள்ளிப் பொறுப்பும் விரைவில் இழந்தான்
பணியை மறந்திட்டான்.

மாதம் பிறந்தால் சம்பளம் தருகிற
வழக்கம் கிடையாது.
மாறிக் கேட்டால் வருமையைப் போக்கத்
தந்தேன் கடன் என்பான்
வாதம் செய்தும் புண்ணியமில்லை
வம்பே வளர்ந்து விடும்.
மானத் திற்கும் மரியாதைக்கும்
அஞ்சா நிலையாச்சு.

கண்ணப்பன் எனும் நண்பன் ஒருவன்
காட்டிய வழியினிலே
கைப்பண மெல்லாம் அழித்தான்-பெரியோர்
பழிப்புக் கிடமுற்றான்.
விண்ணையளாவும் பொருள் வரும் என்ற
வெறியைத் தூண்டிவிட
வெற்றியை நாடிக் குதிரைப்பந்தயம்
மேலும் உருவாச்சு.

நல்லுரையாலே இவளைத் திருத்த
நாட்டம் கொண்டு அவளும்
நாலுவழியிலும் கொண்ட முயற்சிகள்
நகைப்புக் கிடமாச்சு.
அல்லும் பகலும் பள்ளியின் உயர்வுக்கு
ஆர்வம் காட்டியவள்.
ஆறுதல் இன்றி வாடும் குடும்பமாய்
மாறித் துயருற்றாள்.

தந்தைக் கொருநாள் கடிதம் எழுதினாள்
தனக்கொரு வழிகேட்டு.
தடுத்த பந்துபோல் திரும்பும் கடிதம்.
தந்தையும் ஆங்கில்லை.
சிந்தையில் வயிரம் பாய்ந்த பெண்புலி
சினத்தை உள்ளடக்கிச்
சீக்கிரம் வருமென விடிவை நோக்கினாள்
தெரிந்ததா அவ்விடிவு ?

பள்ளியிலிருந்து திரும்பும் பலநாள்
தனித்தே அவள் வருவாள்.
பலபேர் நண்பர் கூட்டுறவோடு
கணவன் திரும்பிடுவான்
உள்ளும் புறமும் வேதனையோடு
இரவுகள் பலகழியும்
முள்ளே முளைத்த பாதையிலேதான்
முழுதும் அவள் நடந்தாள்.

திங்கட் கிழமை இரவில் ஒருநாள்
மேசை விளக்கொளியில்
சீதாலட்சுமி பாடம் திருத்தும்
செயலில் முனைப் புற்றாள்.
மங்கிய ஒளியில் ஆறுமுகத்தான்
மதுவின் மயக்கத்தில்
மனதில் எதையோ முனகிக் கொண்டே
வார்த்தை பேசுகிறான்.

ஆறுமுகத்தான் சீதாலட்சுமி
அன்றைய திருமண நாள்.
ஆசிரியர்கள் நண்பர்கள் கூடி
அமர்ந்து விருந்துண்டு
கூறிச் சென்ற வாழ்த்தொலி இன்னும்
காதில் எதிரொலிக்கக்
கூடத்தருகில் இரண்டு பேரும்
தனியே இருந்தார்கள்.

குடிக்கத் தண்ணீர் வேண்டும் போலக்
குறிப்பால் அவன் காட்டக்
குழந்தையைப் போல சமையல் அறைக்குள்
குதித்து நடைபோட்டாள்.
அடுத்தக் கணமே கதவை வெளியே
அழுத்தித் தாளிட்டான்.
ஆறுமுகத்தின் செய்கை கற்றும்
ஆர்க்குப் புரிகிறது ?

குத்துவிளக்கின் சிற்றொளி மட்டும்
குவிந்து தெரிகிறது.
கோடிச் சுவற்றில் காந்த விளக்கின்
பித்தான் இருக்கிறது.
பத்திரமாகப் பித்தான் அழுத்தி
விளக்கை எரிவித்தாள்.
பார்த்த பார்வையில் அங்கோர் உருவம்
அவளைத் தொடுகிறது.

'வீல்' என்றலறிச் சீதாலட்சுமி
வெறித்துப் பார்க்கின்றாள்.
வேற்றாள் ஒருவன்! சமையலறைக்குள்
எப்படி இவன் வந்தான்?
காலன் போலே நிற்கும் மனிதன்
அவனா கண்ணப்பன்?
கையில் துணியால் காரிகை வாயை
அடைக்க முற்பட்டான்.

''கத்துவதாலே புண்ணியமில்லை
கதவு திறக்காது.
கைம்மேல் ஐம்பது ரூபாய் கொடுத்தேன்
உனக்கு விலையாக.
இத்தனை நாளாய்க் காத்துக்கிடந்தேன்
இன்றே பழமாச்சு
எதற்கும் துணிந்தவன் ஆறுமுகத்தான்
இனிமேல் வரமாட்டான்.''

வார்த்தை ஏதும் சீதாலட்சுமி
வளர்த்த மாட்டாமல்
மாடத்திருக்கும் காய்கறி இருந்த
பக்கம் திரும்புகிறாள்.
பார்த்த பார்வையில் பட்டது கத்தி
பட்டென்றதை எடுத்துப்
பக்கத்திருந்த கண்ணப்பன் உடல்
பார்த்துக் குறிவைத்தரள்.

''போக்கிலிப் பயலே பெண்ணா வேண்டும்
போட்டதை எண்ணிக் கொள்''
போட்டாள் குத்துகள் மூன்றோ நான்கோ
புலையன் நிலை சாய்ந்தான்.
''யோக்கியனைப் போல் திரியும் பதரே
எனையா விலை கேட்டாய்?
ஒழிந்து போடா நாயே'' என்றாள்
உறுமும் புலியானாள்.

ஐயோ என்றே அலறிய அலறல்
அறையின் வெளி கேட்க
ஆறுமுகத்தான் கதவைத் திறந்தான்
அதிர்ந்தான் நிலைகுத்தி.
கையும் கத்தியும் ரத்தமுமாகக்
காரிகை முன் வந்தாள்.
''காசுக்காக விற்றாயாமே''
கணவன் மேல் பாய்ந்தாள்.

எதிர்பாராமல் ஆறுமுகத்தான்
நெஞ்சில் குத்து விழ
''ஏற்றுக் கொள்ளடா காதல்பரிசை
யாரிடம் ஆடுகிறாய்
கதிரை இழந்தான் தரும தேவனை
அன்று பொறுத்தார்கள்
காலம் மாறும் தொட்டால் சுடுவேன்
கண்ணியம் காத்திடுவேன்.''

வீட்டில் எழுந்த கூச்சலைக் கேட்டு
வெளியே பெருங் கூட்டம்.
வெளிப்புறக் கதவை இழுத்துப் பூட்டிக்
காரிகை நடக்கின்றாள்.
''மூட்டை கட்டுவேன் மூளும் நெருப்புநான்''
முழக்கம் செய்கின்றாள்.
முப்பது நொடியில் காவல் நிலையம்
நேரே நடக்கின்றாள்.

கொலையா செய்தாள் செய்தது சரியா
கொடுமை செய்தவர் யார்?
கோடியில் ஒருபெண் வீராங்கனையாய்க்
கொலையும் சரி என்பாள்
பலபேர் இவளைப் பாதகி என்பார்
பாதகம் செய்தவர் யார் ?
பாரத நாட்டில் சீதாலட்சுமி
பண்பை நாட்டுகிறாள்.

# கவிஞரைப் பற்றி

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | வ. சா. பஞ்சநதீசன் |
| கவிஞர் பெயர் | : | ஐயாறப்பன் |
| பிறப்பு | : | 3—4—1928 |
| பிறந்த ஊர் | : | வேலூர், வடார்க்காடு மாவட்டம். |
| சொந்த ஊர் | : | வாகூர், தஞ்சை மாவட்டம். |
| தந்தை | : | வ. சீ. சாமிநாத ஐயர் |
| தாய் | : | ருக்மிணி அம்மாள் |
| பணி | : | ஓய்வு பெற்ற நில சீர்திருத்தத் துறை உதவி ஆணையர், சேப்பக்கம், சென்னை–600 005. |
| முகவரி | : | 50, மசூதித் தெரு, சைதை, சென்னை–600 015. |
| கல்வி | : | இளங்கலைப் பட்டம். |
| கவிதைத் தொண்டு | : | 16 வயது முதல் கவிதையில் ஈடுபாடு. ஆதர்ச கவிஞர் மகாகவி சுப்ரமணிய பாரதியார். சைதை பாரதி கலைக் கழகத்தின் செயலாளர். 1979-ல் பாரதிகலைக் கழகத்தால் கவிமாமணி விருது வழங்கப் பெற்றவர். ஐநூறுக்கும் மேற்பட்ட கவிதைகள் எழுதியுள்ளார். எளிய நடை. |

**இதுவரை வெளிவந்த நூல்கள் :**

1. சுப்பிரமண்யப் பதிகம், 2. சக்திவிநாயகர் அந்தாதி, 3. அனுமாஞ்சலி, 4. தாரீர் ஒளி, 5. சங்கர மும்மணிக் கோவை (பகுதி), 6. வண்ணங்கள் (பகுதி) 7. ஐயாறப்பன் கவிதைகள். 8. பாரதி நூறு (தொகுப்பு) 9. விநாயகர்.



# கவிமாமணி ஐயாறப்பன்

நண்பர் ஐயாறப்பனின் கவிதை முயற்சிகளைக் கிட்டத் தட்ட இருபத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலாகக் கவனித்து வருபவன் நான். கலைஞனின் மனத்தில் வித்தூன்றும் கலைக்கரு, விருட்சமாக வளர்வதற்கு ஒரு தாயின் பரிவுடனும் தன் குழந்தை அவையத்து முந்தியிருக்க வேண்டும் என்ற அவாவுடனும் அவன் அந்தக் கருவைப் பேணி வளர்ப்பது மிக அவசியமாகும்.

கோவிலில் நிறுவப்பட்ட சிலை கூட மந்திர உரு ஏற ஏறத்தான் மகிமை பெறுகிறது. அதைப்போல கலைஞன் செய்யும் யோக வேள்வியில்தான் அவனுடைய கலை பெருகி வளர்ந்து பேராச்சரியம் விளைக்கிறது.

இப்படி ஒரு வேள்வியாகவே கவிதையை வளர்த்துவரும் நண்பர் அவருடையக் கவிதைக் குழந்தையைக் கண்ணேறு படும் அளவுக்கு எழிலும் திறனும் வலுவும் பெற வளர்த் திருக்கிறார். கதைகளைச் கவிதை வடிவில் சொல்லும் முறை மறுமலர்ச்சித் தமிழில் அவ்வளவாகப் பரவவில்லை. கவிமாமணி ஐயாறப்பனின் இந்த நூல் அதை ஓரளவு நிறைவு செய்கிறது.

சென்னை-5
9-12-1987

கவிமாமணி
நா. சீ. வரதராஜன் (பீஷ்மன்)